# கல்கி

## சொந்த வீடு: பகல்கனவுதானா?



KALKI 5.3.89 ரூ. 2.

பால் தேவைப்படும் போதெல்லாம், அமூல்யா இன்ஸ்டன்ட் மில்க்மிக்ஸ் கொண்டு தயார் செய்யுங்கள். வெதுவெதுப்பான நீரில் கலந்து, உங்களின் டீ அல்லது காப்பிக்கு உபயோகியுங்கள். அல்லது பாலாகவும் உபயோகிக்கலாம். இதன் ருசி உங்களுக்கு மிகவும் பிடிக்கும். காரணம் இதனை அளிப்பது அமூல். இதில் அமூல் கொண்டுள்ள சுவையும் தூய்மையும் உண்டு.




# Amulya
## Instant Milkmix

**பால்-எப்போது தேவையோ அப்போது!**






விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப். மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிட்.,
ஆனந்த்-388 001.

ULKA-3-88-TAM

மடமையைக் கொளுத்துவோம்:



# காவலரிடமிருந்து பெண்களைக் காப்பாற்றுங்கள்!

**கா**வல் நிலையத்தில் லாக் அப்'பில் வைக்கப்பட்டிருந்த ஒரு பெண்மணி இரண்டு கான்ஸ்டபிள்களால் பலவந்தமாக அனுபவிக்கப்பட்டார். இது நடந்தது ஹரியானா மாநிலம், பிவானி என்ற ஊரில். இது தொடர்பாக வழக்குப் பதிவு செய்யப்பட்டு, இரு கான்ஸ்டபிள்களுக்கும் பத்து வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. உச்ச நீதி மன்றத்துக்கு முறையிட்டனர் கான்ஸ்டபிள்கள். அங்கு இத் தண்டனை ஐந்து வருடக் கடுங்காவலாகக் குறைக்கப்பட்டது. அதற்கு அளிக்கப்பட்ட காரணம், பலவந்தப்படுத்தப்பட்ட பெண் தவறான நடத்தையுடையவள் என்பது!'

உச்ச நீதி மன்றத்தின் தீர்ப்பு நாடெங்கிலுமுள்ள பெண் உரிமை ஸ்தாபனங்களையும், சமூக நல ஸ்தாபனங்களையும் கிளர்ந்தெழச் செய்துள்ளது. தீர்ப்பை மறு பரிசிலனை செய்யும்படி பிரதம நீதிபதிக்கு ஒரு 'திறந்த' கடிதம் அனுப்பியுள்ளன இந்த ஸ்தாபனங்கள்.

காவலில் உள்ள பெண்ணைப் பலவந்தப்படுத்தி நுகரும் போலீஸ்காரருக்குக் குறைந்தபட்சமாகப் பத்து வருடக் கடுங்காவல் என்பது சட்டத்தில் விதிக்கப்பட்ட தண்டனை. தண்டனையைக் குறைக்கச் சட்டத்தில் இடமிருக்கிறதா?

''விசேஷ சந்தர்ப்பச் சூழ்நிலை என்று காரணம் காட்டி இந்தத் தண்டனையைக் குறைக்கச் சட்டத்தில் இடமிருக்கிறது'' என்கிறார் முன்னாள் நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார். ''ஆனால் சட்டத்தின் காவலர்களே குற்றம் இழைப்பது என்பது எக் காரணம் கொண்டும் சகித்துக் கொள்ள முடியாத விஷயம். அப்படிச் செய்கிறார்கள் எனில் அதற்குத் தண்டனையைக் கடுமையாக்குவதோடு போலீஸாருக்கு அளிக்கப்படும் கல்வி மற்றும் பயிற்சி முறைகளில் உள்ள குறைபாடுகளையும் கவனித்து நீக்க வேண்டும். காவல் நிலையத்தில் 'லாக் அப்'பில் வைக்கப்படும் பெண்கள் ஏதோ ஒரு விதத்தில் தவறு இழைத்ததாகக் கருதப்படுவதால்தான் கைது செய்யப்படுகிறார்கள். அவர்களுடைய தவறான போக்கை விசேஷ காரணமாகக் காட்டி தண்டனையைக் குறைப்பது என்பது சரியல்ல. அவர்களுடைய பலவீனமோ, தவறான போக்கோ, காவல் துறையினர் அவர்களிடம் முறைகேடாக நடந்து கொள்வதை நியாயப்படுத்தவே முடியாது. தண்டனை குறைக்கப்பட்டதற்காக அளிக்கப்பட்ட காரணம் எனது அபிப்பிராயத்தில் ஏற்புடைய காரணமாகத் தோன்றவில்லை.''



• கிருஷ்ணசாமி ரெட்டியார்.

**பி**ரச்னையைச் சமூக நலத் துறை அமைச்சர் சுப்புலட்சுமி ஜகதீசனின் கவனத்துக்குக் கொண்டு போனோம்.

''தமிழ் நாட்டில் தளி என்ற கிராமத்தில் ஒரு பள்ளி ஆசிரியை காவல் துறையினரால் கற்பழிக்கப்பட்ட போது ஊரே திரண்டு எழுந்து அப் பெண்ணுக்கு நியாயம் கிடைக்கப் போராடியது. அதைப் போன்ற விழிப்புணர்வு பரவலாக வேண்டும். அப்போதுதான் தவறான மனப்போக்கு உடைய சில காவலர்களும் எச்சரிக்கை அடைந்து தங்கள் போக்கை மாற்றிக் கொள்வார்கள்'' என்றார். ''அந்த முறையில் இந்த வழக்கிலும் பல பொது நலச் சங்கங்கள் கிளர்ந்தெழுந்திருப்பதை வரவேற்க வேண்டும்.''

''குறிப்பிட்ட இந்த வழக்கில் நீங்கள் என்ன செய்ய முடியும்?''

''இது வேறு ஒரு மாநில அரசு சம்பந்தப்பட்ட பிரச்னை. ஆயினும் நாடாளுமன்றத்தில் உள்ள எங்கள் கழக உறுப்பினர்கள் மூலம் மத்திய அரசின் கவனத்துக்கு இப் பிரச்னையைக் கொண்டு வர முடியும்'' என்று அமைச்சர் கூறிய போது சிறிது நம்பிக்கை பிறந்தது.

– சீதா ரவி.

படம்: **யோகா**



• சுப்புலட்சுமி ஜகதீசன்

# எச்சரிக்கை! எச்சரிக்கை!

நிரந்தரமான வேலையிலுள்ளவர்களுக்கு ஆர்வமும், திட்டமிட்டுச் செயல்படும் தொலைநோக்கும் இருந்தால் 'சொந்த வீடு' என்கிற கனவு நிச்சயம் நனவாக முடியும். அதற்கான கடன் பெற வசதிகள் நிறையவே உள்ளன. ஆனால், இத்தகைய கடன்களைப் பெறும் தகுதியுள்ளவர்கள் வீடு கட்ட முயற்சி செய்யும் போது எத்தனையோ சிக்கல்களை எதிர்கொள்ள வேண்டி வரும். அச்சிக்கல்களை விவரித்து நிலைமை சீராக என்ன வழி என்று கூறுகிறார் கட்டடக் கலை நிபுணரும் வீடு கட்டப் பல வழிகாட்டி நூல்கள் எழுதியவருமான சி. எச். கோபிநாதராவ்.

நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டம் 1976, வீட்டு வசதிப் பிரச்னையைக் குறைக்கும் நோக்கத்துடன் இயற்றப்பட்டதே. இச்சட்டப்படி 500 சதுர மீட்டருக்கும் அதிகமான நிலப்பரப்பு வைத்துள்ளோர் உரிய அரசாங்க அதிகாரியின் முன்-அனுமதியின்றி அந் நிலத்தை விற்கக் கூடாது. அவ்வாறு விற்றால் அந்த விற்பனை செல்லுபடியாகாது. எனவே வீட்டு மனை வாங்குவோர், வாங்கப்படும் நிலம், உச்சவரம்புச் சட்டத்துக்குட்படாததுதான் என்று முன்கூட்டியே உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.





ஆனால், விவசாய நிலங்கள் நில உச்சவரம்புச் சட்டத்துக்குட்பட்டவையல்ல என்பதால் புறநகர்ப் பகுதிகளில் பலர் தங்கள் நிலங்களை விவசாய நிலங்கள் எனக் காட்டி, கூறு போட்டு, வீடு கட்ட விரும்புவோருக்கு விற்று வருகின்றனர். இத்தகைய நிலத்தை வாங்கினால் அதில் வீடு கட்ட அனுமதி கிடைக்காது.

விவசாய நிலங்களில் வீடு கட்டக் கூடாது என்று அரசாங்கம் பொது விதி விதித்திருக்கையில், எம்.எம்.டி.ஏ. அதே விவசாய நிலங்களுள் சிலவற்றைத் தனது அபிவிருத்தித் திட்டத்தில் வீட்டு மனை உபயோகத்துக்

கென ஒதுக்கியுள்ளது.

மேலும், சில இடங்களில், மனை பிரிக்கும் உரிமங்களை எம்.எம்.டி.ஏ. அந்தந்த வட்டார ஆட்சியகங்களுக்குக் கொடுத்து விட்டது. ஆக மனை பிரிப்பது ஒரே சீரான அதிகாரத்துக்கும் சட்டத்துக்கும் உட்பட்ட தில்லை. இதனால் பொது மக்கள் குழம்பிப் போகவும், இடைத் தரகர்கள் அவர்களைச் சுலபத்தில் ஏமாற்றவும் இடமிருக்கிறது.

சென்னை நகர மனைகளில் வீடு கட்டும் அனுமதியைச் சென்னை மாநகராட்சியில் பெறுவது போல் மாநகராட்சி எல்லைக்கு அப்பால் உள்ள மனைகளில் கட்டடம் கட்ட, வட்டார ஆட்சியகங்களில் அனுமதி பெற வேண்டும். ஆனால் இந்த நிலங்களை மனை பிரிக்கும் உரிமங்களை எம்.எம்.டி.ஏ. வழங்க வேண்டும். ஆக, பொது மக்களுக்கு அலைச்சல் அதிகமாவதுடன் வீட்டு மனை அல்லாத இடங்களில் கூட வட்டார ஆட்சியகங்கள் வீடு கட்ட அனுமதி கொடுக்கும் அபாயம் இருக்கிறது.

வீட்டு மனைகள் கூறு போடப்படும் போது, பல விதிகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும். குடியிருப்புக் கட்டடம் கட்ட, ஒரு மனை குறைந்தபட்சம் இவ்வளவு அகலம் இருக்க வேண்டும், இரு மனை வரிசைகளுக்கிடையே சாலை குறைந்த பட்சம் இவ்வளவு அகலம் இருக்க வேண்டும்; இவ்வளவு மனைகளுக்கு இவ்வளவு சாலைகள் இருக்க வேண்டும், குறிப்பிட்ட அளவு நிலம் பொது உபயோகத்துக்கு விடப்பட வேண்டும் என்று எம்.எம்.டி.ஏ. சில கட்டுப்பாடுகள் விதித்துள்ளது. இந்த விதிகளைக் கடைப்பிடித்து மனை பிரிக்கப்படாவிட்டால் அக் குடியிருப்புப் பகுதியில் வீடு கட்ட அனுமதி மறுக்கவும், குடிநீர், சாலைகள், கழிவுநீர் அகற்றல் போன்ற வசதிகளை மறுக்கவும் அரசுக்கு உரிமை இருக்கிறது. எனவே இடைத் தரகர்களின் கவர்ச்சிகரமான விளம்பரங்களில் மயங்கி, அவசரப்பட்டுப் புறநகர்ப் பகுதிகளில் மனை வாங்கி விடக் கூடாது. எம்.எம்.டி.ஏ.யில் விசாரித்து, தாங்கள் வாங்க இருக்கும் மனை அங்கீகாரம் பெற்றதுதானா என்று உறுதி செய்து கொள்ள வேண்டும்.

எல்லா விதிகளையும் கடைப்பிடித்து நியாயமான முறையில் பிரிக்கப்பட்ட மனையை நியாயமான முறையில் வாங்கி, வீடு கட்டுவது என்பது அனேகமாக இயலாத காரியமாகவே இருந்து வருகிறது. பெரும்பாலோர் ஏதேனும் ஒரு விதியை மீறித்தான் வீடு கட்டுகின்றனர். எனவே வீட்டு மனை தொடர்பான சட்டங்கள் சீரமைக்கப்பட வேண்டும் என்பதோடு, மனை பிரித்து lay-out செய்து விற்கும் பொறுப்பை அரசாங்கமே முழுக்க முழுக்க ஏற்றுக் கொண்டால் ஒரே சீரான வகையில் மனைகள் பிரிக்கப்படும் என்பதோடு இடைத் தரகர்களுக்கு இடமின்றிப் போகும்; நிலத்துக்கு நியாயமான விலையும் நிர்ணயமாகும்.

இந்தத் துன்பமே வேண்டாம்; யார் புறநகர்ப் பகுதியிலிருந்து தினமும் நகரத்துக்கு வந்து போவது; 'வீடு' சினிமாவில் வருவது போல் யார் அடிக்கடி சென்று கட்டட வேலையை மேற்பார்வையிடுவது; தோட்டம் துரவு இல்லாவிட்டால் என்ன; 800 — 900 சதுர அடியில் ஒரு சின்ன ஃபிளாட் நகரத்தின் மையத்தில் இருந்தால் போதுமே, என்ற எண்ணத்துடன் ஃபிளாட் வாங்க முயல்வோருக்கு உள்ள பிரச்னைகளைப் பாருங்கள்:

ஃபிளாட்டுகளுக்கு ஏகப்பட்ட கிராக்கி



யிருப்பதால் முன்பணம் செலுத்தி **advance booking** செய்து கொள்ள வேண்டும். பல ஆயிரக்கணக்கில் முன்பணம் கொடுத்தாலும் உரிய கால கெடுவுக்குள் ஃபிளாட்டைக் கட்டித் தராமல் பல சாக்கு போக்குகளைச் சொல்கிறார்கள் ரியல் எஸ்டேட்காரர்கள். இதனால் கடன் வாங்கி முன்பணம் செலுத்தியுள்ளவர்கள் ஏகமாக வட்டி செலுத்த வேண்டியுள்ளது.

போதாக்குறைக்கு இவர்கள் தரமான பொருட்களை உபயோகித்துத்தான் கட்டுகிறார்களா என்பதற்கு உத்தரவாதம் இல்லை.

ஃபிளாட்டின் பரப்பளவு 900 சதுரடி என்று இவர்கள் விளம்பரப்படுத்துவார்கள். உண்மையில் 600 — 700 சதுர அடிதான் இருக்கும். பாக்கி இடத்திற்கு மாடிப்படி, நடைபாதை போன்ற பொது இடங்கள், சன்ஷேடை ஒட்டி ஒற்றைக்கல் சுவரெழுப்பிக் கட்டப்பட்ட அலமாரி என்று சேர்த்து, கூட்டி, கணக்குக் கொடுப்பார்கள்.


• கோபிநாத ராவ்

ஒரு மனையில் பன்மாடிக் குடியிருப்புக் கட்டுபவர் மனை அளவைப் பொருத்தே கட்டடத்தின் மொத்த வசிப்பிட அளவை அமைக்க வேண்டும். பம்பாயில் இந்த விகிதாசாரம் 1:1.33 என்று நிர்ணயிக்கப் பட்டுள்ளது. சென்னையிலோ 1:2.5 வரை அனுமதிக்கப்படுகிறது. இதனால் சிறிய நிலப்பரப்பில் நிறைய குடும்பங்கள் வாழ்கின்றன. இத்தனைக்கும் பம்பாயைக் காட்டிலும் சென்னையில் குடிநீர், கழிவுநீர் அகற்றல் வசதிகள் குறைவுதான்.

போதாக் குறைக்கு, முதலில் 'பிளானி'ல் வெற்றிடமாகக் காண்பித்த நிலத்தில் பிற்பாடு கட்டடம் கட்டி விடுகிறார் ரியல் எஸ்டேட்காரர். 'கார் பார்க்' என்றும் மொட்டை மாடி என்றும் திட்ட வரைவில் காண்பிக்கப்பட்ட இடங்களைக் குடியிருப்புகளாக்கி விற்று விடுகிறார் அல்லது வாடகைக்கு விடுகிறார்.

சில ரியல் எஸ்டேட்காரர்கள் நியாயமாகவும், நாணயமாகவும் நடந்து கொண்டாலும் பெரும்பாலோர் மேற்கண்ட வகைகளில் மக்களை ஏமாற்றி வருகிறார்கள். ஃபிளாட் வாங்கும் பொது மக்கள் இவர்களை ஏன் தட்டிக் கேட்கக் கூடாது என்பீர்கள். ஆனால் சட்டத்திலிருந்து தப்ப மிக சாமர்த்தியமாக ஓர் ஒப்பந்தத்தை வரை

மத்திய அரசு புதிய கல்விக் கொள்கையைப் போல் ஒரு புதிய வீட்டு வசதிக் கொள்கையை உருவாக்கி வருகிறது. இக் கொள்கை ராஜ்ய சபாவில் ஏற்கப்பட்டு, லோக் சபாவில் விவாத கட்டத்தை எட்டியிருக்கிறது. அரசாங்கத்தின் இக் கொள்கை ஏழை எளியோரின் வீட்டு வசதிப் பிரச்னையைத் தீர்க்கும் தன்மையுடையதாக இல்லை; மாறாக, இருக்கும் வீட்டு வசதிகளையும் குறைத்துவிடக் கூடிய அபாயம் இருக்கிறது' என்று கூறி, 'நேஷனல் கவுன்சில் ஃபார் ஹவுசிங் ரைட்ஸ்' என்ற அமைப்பு அதனை எதிர்த்துக் கூக்குரல் எழுப்பி வருகிறது.

கிறார் ரியல் எஸ்டேட்காரர். ஃபிளாட் கட்டப்படும் நிலத்தை விற்பவர் — அ; நிலத்தை வாங்குபவர் — ஆ; ஃபிளாட்டைக் கட்டித் தரும் ரியல் எஸ்டேட் காண்ட்ராக்டர் — இ. இந்த மும்முனை ஒப்பந்தத்தில் வெறும் 'காண்ட்ராக்டராக' மட்டுமே ரியல் எஸ்டேட்காரர் இடம் பெறுவதால் அவர் எந்தப் பொறுப்பையும் ஏற்க வேண்டாம்!

இந்த அநியாயத்துக்குத் தீர்வு என்ன? இந்தியாவின் மற்ற மாநிலங்களில் உள்ளதைப் போன்ற **Apartment Act,** தமிழகத்திலும் கொண்டு வரப்பட வேண்டும். இதன்படி ஒரு ரியல் எஸ்டேட்காரர் தாம் கட்டும் ஒவ்வொரு பன்மாடி குடியிருப்புப் பகுதிக்கும் தனித் தனியாகக் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது ஓரிடத்தில் பணம் வாங்கி வேறு காரியத்துக்கு அதைப் பயன்படுத்த முடியாது. கட்டடப் பணிகள் அவ்வப்போது அரசாங்கத்தால் பரிசோதனைக்குட்படுத்தப்படும். கட்டடத்தின் தரம், ஒரு 'சார்பற்ற' பொறியியல் வல்லுனரால் பரிசோதித்து, அங்கீகரிக்கப்பட வேண்டும். குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் கட்டடத்தைக் கட்டி முடித்தே ஆக வேண்டும். திட்டத்தில் காட்டப்படாத கட்டட அமைப்புக்கும் பகுதிக்கும் ரியல் எஸ்டேட்காரர் பொறுப்பேற்க வேண்டும்.

இத்தகைய சட்டம் கொண்டு வரப்பட்டால் பகிரங்கமாகக் கறுப்புப் பணம் கேட்கும் பல ரியல் எஸ்டேட் முதலைகளின் கொட்டம் அடங்கும். அதோடு டவுன் பிளானிங் ஆக்ட் என்ற சட்டத்தின் 113—ஆவது பிரிவின் கீழ், கட்டடம் எழுப்பும் ஒருவர் அனேகமாக எல்லா விதிகளிலிருந்தும் விலக்கு பெறும் வாய்ப்பு இப்போது இருக்கிறது. இந்தச் சட்டத்தையும் திருத்தி, விதிவிலக்கு அளிக்கும் அதிகாரத்தை, மக்கள் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு சார்பற்ற குழுவிடம் ஒப்படைத்தால் பொது மக்களுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்.

அட்டையில்: **ஜெயந்தி. ஸ்ரீதர்**

மேலட்டை வண்ணப்படம்.

புகைப்படங்கள்: **கே. வி. ஆனந்த்**

சித்திரம்: **நடனம்**

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் முட்டையின் புரதச் சத்தூட்டத்தை!



# ஃபாரெக்ஸ்®-எக்




## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ் எக் — இது, உங்கள் குழந்தையின் முழு நிறைவான வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்தைக் கொண்டுள்ளது. இது, நன்றாக முன்பே பக்குவப் படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மை யான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**

**இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-எக்**

GX/32/203 TML

சொந்த வீடு:
பகல் கனவுதானா?

# வீடு கட்ட உதவுகிறார்கள்!



சொந்த வீடு என்ற இலக்கை அடைய உதவுவதற்கு அரசாங்க, தனியார் நிறுவனங்கள் இப்போது பொது மக்களுக்குப் பல திட்டங்கள் மூலம் உதவி வருகின்றன.

அவற்றுள் சிலவற்றைச் சுருக்கமாகத் தருகிறோம்:

**த**னி நபர்கள் வீடு கட்டிக் கொள்ள நிதியுதவி செய்யும் நிறுவனம் ஹெச்.டி. எஃப்.சி. என்று அழைக்கப்படும் ஹெளசிங் டெவலப்மெண்ட் ஃபைனான்ஸ் கார்ப்பரேஷன். இந்தியாவெங்கும் கிளைகள் கொண்ட இதன் சென்னை அலுவலக மேலாளரான திரு. நரசிம்மன், ஹெச்.டி. எஃப்.சி.யின் திட்டங்கள் பற்றி விளக்குகிறார்:

''நிலம் வாங்கி, வீடு கட்டிக் கொள்ளவோ, கட்டிய வீட்டை வாங்கவோ, அல்லது இப்போது பாஷனாகி வரும் ஃபிளாட்டுகளை வாங்கவோ எங்களிடம் கடனுதவி பெறலாம். தனி நபர்கள் ஒன்றாய்ச் சேர்ந்து, கூட்டுறவு சங்கம் அமைத்து, வீடு கட்டிக் கொண்டாலும், கடனுதவி உண்டு.''

''ஒருவர் எவ்வளவு தொகையைக் கடனாகப் பெற முடியும்?''

''ஏழாயிரம் ரூபாயிலிருந்து, இரண்டரை லட்சம் ரூபாய் வரை அவரவரது திரும்பிச் செலுத்தும் திறனுக்கேற்பக் கடன் தரப்படும். வீடு அல்லது ஃபிளாட்டின் மொத்த மதிப்பில் (நிலத்தின் மதிப்பு உட்பட) எழுபது சதம் வரை கடன் பெறலாம். கடன் பெற விண்ணப்பிக்கும் போது விண்ணப்பத்துடன் தேவையான பிற தஸ்தாவேஜ்களையும் இணைக்க வேண்டும். விண்ணப்பப் பரிசீலனைக்கு, ஆயிரம் ரூபாய்க்கு எட்டு ரூபாய் வீதம் கட்டணம் உண்டு. வட்டி விகிதம் பன்னிரண்டரையிலிருந்து பதினான்கரை சதம் வரை கடன் தொகைக்கேற்ப வேறுபடும். கடன் தொகையைத் திரும்பச் செலுத்தும் காலம் ஐந்திலிருந்து இருபது ஆண்டுகள் வரை வேறுபடுகிறது. கடனின் பேரில் வீடு வாங்கப்படுவதால்



வீட்டின் முதல் உரிமை ஹெச்.டி.எஃப்.சி. யையே சேரும். இவை தவிர, ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஹெச்.டி.எஃப்.சியில் பணத்தைச் சேமித்து விட்டு, பின்னர் குறைந்த வட்டிக்குக் கடன் பெறும் சிறப்புத் திட்டமும் உள்ளது.''

எல்.ஐ.சி. நிறுவனம் சென்னை, பம்பாய் போன்ற பெரு நகரங்களில் ஃபிளாட் வாங்குவதற்கான பிரத்தியேகத் திட்டம் ஒன்றை 'பீமா நிவாஸ் யோஜனா' என்கிற பெயரில் அறிமுகப்படுத்தியுள்ளது. எல்.ஐ.சி. உயர் அதிகாரி நடராஜன் சொன்னார்:

''இத் திட்டத்தின் கீழ் அதிகபட்சமாய் இரண்டரை லட்சம் வரை கடன் பெற முடியும். இத் திட்டத்தின் சிறப்பு அம்சம் என்னவெனில், கடன் பெறுபவர், தாம் பெறும் கடன் தொகைக்கு ஈடான எல்.ஐ.சி. பாலிசியை எடுத்துக் கொண்டு, அதற்குரிய பிரீமியத்தையும், கடனுக்குண்டான வட்டியையும் கட்டினால் போதுமானது. பாலிசி முதிர்ச்சியடையும் போது போனஸ் மட்டும் கிடைக்கும். பாலிசிக்கான பிரீமியம் கட்டுவதால், அசல் தொகையைக் கட்ட வேண்டியதில்லை!''

தற்போது, தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் பெரிய அளவில், பொது மக்களுக்கு வீடு கட்டுவதற்குக் கடனுதவி செய்வதில்லை என்றாலும் இந்த நிலைமை விரைவில் மாறப் போகிறது! ஆம்! தேசிய வீட்டு வசதி வங்கி என்கிற நிறுவனம் உருவாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இந்த தேசிய வங்கியின் நோக்கம், வங்கிகளைப் பெருமளவில் வீட்டு வசதிக் கடன்கள் தரச் செய்து, அவ் வங்கிகளுக்கு மறு நிதியுதவி (Refinance) செய்வதுதான் என்பது குறிப்பிடத்தக்கது.

— எஸ். சந்திரமௌலி.

# அரசின் கொள்கைகள் அனுசரணையாக இல்லை!

வீட்டு வசதி வாரியத்தால் கட்டப்படும் குடியிருப்புகள் தரத்தில் சிறந்தவையாக இல்லை என்ற குறை நீண்ட நாட்களாகவே இருந்து வருகிறது. அதனால் தனியார் கட்டித் தரும் குடியிருப்புக்களுக்குக் கிராக்கி அதிகமாகியது. இப்போது பொது மக்களுக்குத் தனியார் ஃபிளாட்டுகளிடமும் ஏக அதிருப்தி. 'கட்டடம் தரமாக இல்லை; ஏமாற்று அதிகம்; சட்ட மீறல்கள் ஏராளம்' என்று புகார் கூறும் பொது மக்களுக்குப் பதில் கூறுகிறார் அத்துறையில் நெடு நாட்களாக ஈடுபட்டுள்ள ஒருவர்:

''ஃபிளாட் கட்டும் நிறுவனங்கள் எல்லாமே மிக யோக்கியமானவை என்று கூறி விட முடியாது. ஆனால் யோக்கியமாக இருக்க நினைப்பவர்கள்கூட அவ்வாறு நடந்து கொண்டால் லாபத்தைக் காண முடியாத அளவுக்குச் சட்ட திட்டங்கள் நெருக்குகின்றன. பொது மக்களுக்கும் போதுமான அளவு விழிப்புணர்ச்சி இல்லை. அரசாங்கம் மட்டும் மனம் வைத்தால் மிக எளிதாக இந்த நிலைமையைச் சீர் செய்ய முடியும்.

''உதாரணமாக, பல நாடுகளில் கான்கிரீட் கலவை தயாரிக்கத் தனியாக உரிமம் பெற வேண்டும். அவ்வுரிமம் இல்லாதோர் கலவை போட முடியாது. நம் நாட்டில் அத்த →



கைய கட்டுப்பாடு எதுவும் இல்லாததால் யார் வேண்டுமானாலும், போதுமான அனுபவமோ பயிற்சியோ இன்றியே கட்டடத் துறையில் இறங்கி விடுகிறார்கள். பொது மக்களுக்கும் கட்டடக் கலை நுணுக்கங்கள் தெரியாததால் அவர்களால் முன்கூட்டியே தவறுகளைக் கண்டுபிடிக்க முடிவதில்லை.

''பொதுமக்களுக்கு, ஃபிளாட் கட்டுவது தொடர்பான விதிகளைப் பற்றி அரசாங்கம் எளிமையாகவும், விரிவாகவும் எடுத்துச் சொல்லலாம். ஃபிளாட் கட்டும் நிறுவன அலுவலகங்களில் அவ்விதிகளையும் வரைபடங்களையும் அச்சிட்டு, கண்டிப்பாக, பொதுமக்கள் பார்வைக்கு வைக்க வேண்டும் என்று விதி செய்யலாம். (ஃபாக்டரி சட்டங்களைத் தொழிற்சாலைகளில் அச்சிட்டுப் பார்வைக்கு வைத்துள்ளது போல்).

''கூட்டுறவு சங்கங்கள் மூலம் வீடு கட்டுவதை ஊக்கப்படுத்தி வளர்க்கலாம். இவ்வாறு செய்தால் வங்கிகளிடமிருந்து சங்கங்கள் நேரடியாகக் கடனுதவி பெற முடியும்; கட்டடச் செலவு கணிசமாகக் குறைவதோடு சங்க உறுப்பினர்கள் மாறி மாறிக் கட்டுமானப் பணிகளை மேற்பார்வையிடலாம்.

''அரசு நிலங்களைக் குறைந்த விலைக்குத் தந்து கூட்டுறவு முறையில் வீடு கட்டுவதையும் ஊக்குவித்தால் ஏழை எளியோருக்குக் குறைந்த விலையில் தரமான வீடுகள் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது.

''ஆனால், அரசாங்கம் இத்தகைய உபயோகமான காரியங்களைச் செய்யாமல் தேவையற்ற கட்டுப்பாடுகளைத்தான் அதிகரித்துள்ளது. வீட்டு வசதி என்பது அடிப்படைத் தேவை. அரசாங்கக் கொள்கைப்படி முன்னுரிமை பெற்ற துறை. ஆனால் வங்கிகளைப் பொறுத்தவரை அந்த முன்னுரிமை இத்துறைக்குக் கிடையாது என்பதால் எங்களைப் போன்ற ஃபிளாட் கட்டும் கம்பெனிகளுக்கு வங்கிக் கடன் கிடைக்காது. முப்பது சதவிகிதத்துக்கும் மேல் வட்டி தந்து கடன் வாங்க வேண்டும்.

''நில உச்சவரம்புச் சட்டம் காரணமாக மனைகள் எட்டு — ஒன்பது லட்சம் வரை விலை ஏறிவிட்டன. கட்டடம் கட்டத் தேவையான பொருட்கள் அநியாயமாக விலை ஏறுகின்றன. இரவோடு இரவாக ஒரு 'லோடு' செங்கல் விலை 1300 ரூபாயிலிருந்து 2300 ரூபாயாக ஏறிவிட்டது.

''எம். எம். டி. ஏ. வுக்கு நாங்கள் ரொக்கமாக ஒரு தொகையை முன்கூட்டியே செக்யூரிடி டெபாஸிட் ஆகச் செலுத்த வேண்டும். பிளான் சாங்க்ஷன், மின் இணைப்பு, தண்ணீர், என்று ஒவ்வொரு வசதிக்கும் அலைந்து, 'சம்திங்' அழுதுதான் பெற வேண்டும்.

''நில மதிப்பில் 14 சதவிகிதமாக இருந்த பத்திரக் கட்டணம் (stamp duty) இப்போது நிலம் + கட்டட அமைப்பில் 14 சதவிகிதமாக உயர்ந்துவிட்டது.

''பம்பாயில் கட்டட மதிப்பினைப் பொறுத்துத்தான் stamp duty — ஐ நிர்ணயிக்கிறார்கள். ஒரு லட்ச ரூபாய் வரை பெறுமானமுள்ள கட்டடங்களுக்கு நூறு ரூபாய் தான் stamp duty + ஒரு சதவிகிதம் பதிவுக் கட்டணம். கிரயம் அதிகரிக்க அதிகரிக்க stamp duty அதிகமாகும்.

''எங்களை இங்குமங்குமாகப் பந்தாடி அலையச் செய்யாமல், single window clearance ஆக ஒரே இடத்தில் ஒரு கையெழுத்துப் பெறுவதன் மூலம் வீடு கட்ட அனுமதி மட்டுமின்றி, மின் இணைப்பு, குடிநீர் வசதி போன்ற அனைத்தையும் பெற முடிந்தால் எங்களுக்குச் சுலபமாக இருப்பதோடு பொது மக்களுக்கும் செலவு குறையும்.''

---


வி.பி.சிங்
ராஜீவ் எதிர்ப்பு! ஒற்றுமை வளர்ப்பு!


மெத்தை பாருங்க 'ஜில்லு' போர்! ஜாலியா படுத்துக்குங்க!
ரயில் பயணி →
சரக்கு கட்டண உயர்வு ரூ 876 கோடி
பயணக் கட்டண உயர்வு இல்லை
மாதவராவ் சிந்தியா


எம்.ஜி.ஆர். அறிந்தோ அறியாமலோ கட்டின சாராயக் கோட்டையைத் தரை மட்டம் ஆக்கிட்டாரா!.. பாவி!



கல்கி

1989 மார்ச் 5
மலர் 47 இதழ் 31
விபவ மாசி 22



# விண்ணளாவிய ஊழல்!

திருநாவுக்கரசை நினைத்தால், 'ஐயோ பாவம்!' என்றிருக்கிறது. சோம சுந்தரத்தை எண்ணினால் 'அந்தோ, பரிதாபம்!' என்றிருக்கிறது. 'அ. தி. மு. க. ஆட்சியில் நூறு கோடி ரூபாய் ஊழல் நடந்திருக்கிறது' என்பதைத்தான் சுட்டிக் காட்டினார் முதல்வர். 'ஊழலுக்கான ஓட்டையை அடைத்திருக்கிறோம்' என்றார். தனிப்பட்ட யார் மீதும் குற்றம் சுமத்தவில்லை. ஆனால் உடனே, 'எங்கள் தலைவர் எம்.ஜி.ஆர். மீது அவதூறு சுமத்து கிறீர்களே' என்று புலம்பினார் திருநாவுக்கரசு. எஸ்.டி. சோமசுந்தரமோ, 'இறந்தவர் மீது பழி சுமத்துவதுதானா தமிழர் பண்பாடு? ஒருவர் குற்றம் செய்திருந்தாலும் அவர் இறந்த பிறகு அது பற்றிப் பேசலாமா?' என்று ஒரு குரல் அழுதார். முதல்வரின் வாதங்களுக்கும் நிரூபணங்களுக்கும் இவர்களால் பதில் கூற முடியாததுதான், 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்பது போல் இவர்கள் பேசக் காரணம். இதன் மூலம், எம்.ஜி.ஆர். இந்த ஊழலில் நேரடியாகச் சம்பந்தப்பட்டிருந்தாரோ இல்லையோ, முன்னாள் முதல்வர் என்ற முறையில் முழுப் பொறுப்பு ஏற்க வேண்டியவராகிறார் என்பதை அவ்விருவருமே உணர்த்தியிருக் கிறார்கள். ஆண்டொன்றுக்கு நூறு கோடி ரூபாய் ஊழலை மூடி மறைத்துப் பூசி மெழுகு வதுதான் தமிழர் பண்பாடு எனில் தமிழர் பண்பாட்டின் இலக்கணம் திருத்தி எழுதப்பட வேண்டும் என்பதை எஸ்.டி.எஸ்ஸுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கள், சாராயக் கடைகள் மூடப்பட்டிருப்பதால் கள்ளச் சாராயம் கரை புரண்டு ஓடுவதாகச் சில சட்டசபை உறுப்பினர்கள் பேசியுள்ளனர். இது சரியான நோக்கு அல்ல. பெரும்பாலான மக்கள் சாராய அரக்கனிடமிருந்து காப்பாற்றப்பட்டிருக்கிறார்கள் என்பதும் மிகச் சிறுபான்மையினரே கள்ளச் சாராயத்துக்குப் பலியாகிறார்கள் என்பதும் தான் உண்மை. ஆயினும் அபரிமித தண்டனை, குற்றங்களைக் குறைக்கவில்லை என்றும் தீர்ப்பு வழங்கப்படாத வழக்குகள் குவிந்து வருகின்றன என்றும் எடுத்துக் காட்டப்பட்டதை மறுப்பதற்கில்லை. தண்டனையைக் குறைத்ததும் மனிதாபிமான நோக்கில் சரியானதே. இது, இந்த வகையில் நடக்கும் சிறிய அளவிலான லஞ்ச ஊழல்களைக் குறைக்கவும் செய்யும். மேலும், குற்றங்களுக்குத் தண்டிப்பதை விடக் குற்றங்களே நடக்காமல் விழிப்புடன் இருந்து செயலாற்றுவதே சிறந்தது என்பதை அரசும் அதிகாரிகளும் உணர்ந்து செயல்பட வேண்டும். சாராயத்தின் தீமைகள் பற்றிச் சாமானிய மக்களிடையே பலமான பிரசாரம் செய்வதும் உதவும். இதற்குச் சாராய சாம்ராஜ்யக் கோட்டையைத் தகர்த்ததால் அரசுக் குக் கிடைத்துள்ள நூறு கோடி ரூபாயில் ஒரு சதவீதத்தையாவது பயன்படுத்தலாமே!

'இந்தியாவில் தயாராகும் அயல்நாட்டு மது வகைகளை இனி அரசுத் துறையே தயாரிக்கும்; இந்த வகை மதுக் கடைகள், ஏலம் விடப்படும்; எக்ஸைஸ் வரிகள் அதிகரிக் கப்படும்' என்றெல்லாம் முதல்வர் தெரிவித்திருக்கிறார். இதனாலெல்லாம் அரசுக்கு மேலும் வருவாய் அதிகரிக்கும் என்பது உண்மைதான் எனினும் இவற்றில் வேறு விதங்களில் மீண்டும் லஞ்ச ஊழல் தலையெடுத்து விடாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். மது, அதனை அருந்துகிறவனை மட்டுமின்றி, அதனைச் சுற்றி வளைத்துக் கையாள்கிற வனைக் கூடச் சமயம் பார்த்துக் கவிழ்த்து விடுகிற சைத்தானாகும். அதனை அடியோடு ஒழித்துக் கட்டி, பூரண மது விலக்கு அமுல்படுத்துவதுதான் உசிதம். 'இந்தியா முழுவதும் மது விலக்கு வரட்டும், அப்புறம் பார்ப்போம்' என்பது, அலை ஓய்ந்த பின் சமுத்திர ஸ்நானம் செய்வது போன்றதுதான். தி. மு. க. சார்ந்திருக்கிற தேசிய முன்னணி மத்தியில் பதவிக்கு வந்தால் கூட நாடு தழுவிய அளவில் மது விலக்கு அமுலாகப் போவதில்லை. 'மதுக் கடைகள் விலையுயர்ந்த மது வகைகளைத்தான் விற்கின்றன; வசதி படைத்தவர்கள் தான் வாங்கிக் கெட்டுப் போகிறார்கள்' என்ற வாதம் தவறானது. நல்லாட்சியின் இலக்கணமல்ல என்பதுடன் ஜனநாயக அடிப்படைகளுக்கே முரணானது. வசதி படைத்த வர்கள் கெட்டால் அவர்களைச் சார்ந்து நிற்பவரும் நலிவார்கள். மேலும் வசதியற்றவர் களையும் மதுக்கடை ஆசை காட்டி ஈர்த்துப் படு குழியில் தள்ளுகிறது.

'பாலைவனத்தில் பயணம் தொடங்குகிறேன்' என்று கூறிய முதல்வர், கஜானா வைக் கணிசமாக நிரப்ப வழி கண்டிருக்கிறார். பட்ஜெட் மேலும் அதற்கு உதவும். தமிழகத் தின் நிதி நிலைமை ஓரளவு சீர்ப்பட்டதும் பூரண மது விலக்குப் பக்கமாக தி. மு. க. ஆட்சியின் கவனம் திரும்பும் எனத் தமிழகம் எதிர்பார்க்கிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்



**Mrs. BHANDARKAR**

நேற்றுதான் ரெஜினா கிட்டேயிருந்து லெட்டர் வந்தது. இந்த வெகேஷனுக்கு பசங்களை அழைத்துக் கொண்டு வரேன்னு எழுதி யிருக்கா.

மகளையும் பேரப்பசங்களையும் ரொம்ப நாள் கழிச்சு பார்க்கப் போறோம்னு ரொம்ப சந்தோஷமா இருந்தாலும் பேரப்பசங்க என்னை படுத்தின பாட்டை நினைச்சா எனக்கு பயமா இருக்கு.

ஆறு வருஷத்துக்கு முன்னால அவங்க அமெரிக்காவில் செட்டில் ஆனதனால பசங்களுக்கு தாய்மொழி கம்ப்ளீட்டா மறந்தே போயிடுச்சு. அவங்க எதுக் கெடுத்தாலும் இங்கிலீஷ்லயே கேட்டு என்னை தொல்லைப்படுத்துவாங்க.

நானும் S.S.L.C. வரை படிச்சிருந்தாலும், இந்த பொடிப்பசங்களுக்கு சமமா என்னால இங்கிலீஷ்ல பேச முடியலே. அவங்க கேக்கர கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாம திண்டாடிப் போயிடுவேன்.

போன வருஷம் வெகேஷன் முடிஞ்சு அவங்க ஊருக்குபோன உடனேயே என்னுடைய இங்கிலீஷ் நாலட்ஜ்ஜை இம்ப்ருவ் பண்ணிக்கிட்டு அவங்களோட நல்லா இங்கிலீஷ்ல பேசணும்னு தீர்மானிச்சு நிறைய புத்தகங்களை வாங்கிப்படிச்சேன். ஆனா, நான், எதிர்பார்த்த முன்னேற்றம் கிடைக்கல. அப்போதான் மெட்ராஸ்ல இருக்கர விவேகானந்தா கல்வி நிலையத்தைப் பற்றி கேள்விப்பட்டு அவங்க நடத்தர ''ஸ்போக்கன் இங்கிலீஷ்'' கோர்ஸ்ல சேர்ந்தேன். அவங்க அனுப்பற பாடங்களை வீட்ல இருந்தபடியே படிச்சு அவங்க சொன்ன மாதிரி ப்ராக்டிஸ் பண்ணி பார்த்தேன். எனக்கே இப்ப ஒரு ஸெல்ப் கான்பிடன்ஸ் ஏற்பட்டிருக்கு பயப்படாம இங்கிலீஷ்ல பேச முடியும்ங்கற நம்பிக்கை ஏற்பட்டிருக்கு.

இந்த முறை என் பேரப்பசங்க இன்னும் கொஞ்சம் சீக்கிரமா வர மாட்டாங்களான்னு ரொம்ப ஆவலுடன் எதிர்பார்த்துக்கிட்டிருக்கேன்.

ஆங்கிலத்தில் பேச விரும்பும் அனைவருக்கும் மிகச்சிறந்த முறையில் தபால் மூலம் விவேகானந்தா கல்வி நிலையத்தினர் பயிற்சியளிக்கிறார்கள்.

**''நேர்முகப் பயிற்சியும் உண்டு'' பெண்களுக்கு தனி வகுப்புகள் நடத்தப்படுகிறது.**

இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற விரும்புவோர் கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

## விவேகானந்தா கல்வி நிலையம்

**P.B. No. 4986**

**9, மேட்லி ரோடு, தி.நகர்,**

**சென்னை-600 017**



**– NAGA**

# கவியரசன் விருது பெறும் இசையரசி



**போ**பால் என்றாலே 'விஷ வாயு' விபத்தும் அதன் பயங்கர விளைவுகளுமே நினைவு வருகின்றன. ஆனால் நவீன விஞ்ஞானத்தை அஜாக்கிரதையாகக் கையாண்டதன் விளைவால் மத்தியப் பிரதேசத்தின் பழம் பெருமைகளை அழித்து விட முடியாதல்லவா...? ஆம். காளிதாசனால் வணங்கப் பெற்று அவன் நாவில் அமுத மயமான கவி சுரக்கச் செய்த வித்யா ரூபிணியான காளியன்னையின் கோயில் மத்தியப் பிரதேசத்தில் உஜ்ஜயினியில்தான் இருக்கிறது. விக்ரமாதித்தனும் அவன் மந்திரியாகிய பட்டியும் அற்புத சாகஸங்கள் செய்து அரசாண்ட பூமி. நவரத்னங்கள் என்று புகழப்பட்ட மகா கவிகள் வாழ்ந்த இடம். பாரத நாட்டின் மையமாக விளங்கி வடக்கையும் தெற்கையும் இணைக்கும் மாநிலம்.

சில ஆண்டுகளாக இந்த இணைப்பை இன்னொரு விதத்திலும் நிரூபித்து வருகிறது மத்தியப் பிரதேசம். இந்தியாவெங்கிலும் உள்ள கலைஞர்களைப் பேணி உற்சாகமும் ஊக்கமும் அளித்துக் கலை வளர்ச்சிக்கு உதவி வருகிறது. இதற்காகவென்றே அமைக்கப்பட்டது பாரத் பவனம் என்ற பண்பாட்டு நிறுவனம். இது போபாலில் இயங்கி வருகிறது. ஆண்டுதோறும் சாஸ்த்ரீய சங்கீதம், கிராமியக் கலைகள், நாட்டியக் கலை, ஓவியம், கவிதை புனைதல் இவற்றில் தலைசிறந்தவர்களைத் தேசிய, மாநில அளவுகளில் தேர்ந்தெடுத்துக் கௌரவித்து வருகிறது பாரத் பவனம். பாரத நாட்டின் பல்வேறு மாநிலங்களிலுமுள்ள அறிஞர்கள் ஒன்று கூடி விவாதித்துப் பரிந்துரை செய்யும் கலைஞர்களுக்குக் 'காளிதாஸ் ஸம்மான்' என்ற விருதும் ஒரு லட்சம் ரூபாயும் வழங்குகிறது. ஏற்கெனவே தமிழ் நாட்டிலிருந்து செம்மங்குடி, ருக்மணி தேவி ஆகிய இருவரும் இந்தப் பரிசினைப் பெற்றுள்ளனர். இந்த ஆண்டு எம்.எஸ். இந்தப் பரிசைப் பெற்றார்.

எம்.எஸ்.ஸுடன் ஒடிஸ்ஸி நாட்டியக் கலைஞரும் குருவுமான கேலு சரண் மகாபாத்ராவும், ஓவியக் கலைஞர் தையப் மேத்தாவும் இவ்வாண்டு 'காளிதாஸ் சம்மான்' பெற்றனர்.

**ப**ரிசளிப்பு விழா அண்மையில் போபாலில் நடைபெற்றது. என்ன அழகான சூழ்நிலை! நீல நிற ஏரி. அதில் நீந்தும் நீர்ப் பறவைகள். தூரத்தில் தெரியும் நகரம். துல்லியமான வானம். சிலுசிலுவென்ற திறந்த வெளி அரங்கு. விழாவில் மெய்யாகவே மெய்சிலிர்த்துக் கொண்டே இருந்தது! அரங்கத்தில் பரிசு பெறும் கலைஞர்களும் முக்கியஸ்தர்களும் அமருவதற்காகப் போட்டிருந்த நாற்காலிகள் கூடக் கலையழகுடன் விளங்கின. விழாவுக்கு வருகை தந்தவர்கள் உட்கார நாற்காலிகள் கிடையாது. சித்திர விசித்திரமான நிறங்களில் திண்டுகள் மீது தான் அமர வேண்டும். சாயவோ, தூங்கி வழியவோ முடியாது. நிமிர்ந்துதான் உட்கார்ந்திருக்க வேண்டும். நல்ல ஏற்பாடு.

பத்திரங்கள் ஒவ்வொன்றாக வாசித்துக் கொடுப்பதற்குள் இருள் சூழ்ந்து விட்டது. தூரத்தில் தெரியும் விளக்குகளும், ஏரியில் அவை பிரதிபலிப்பதும், நீர்ப் பறவை ஒன்றின் குரலும் அமைதியான சூழ்நிலையும் சேர்ந்து கனவுலகக் காட்சி போல் இருந்தது.

**வி**ழாவில் ஓவியக் கலைஞர் தையப் மேத்தாவின் ஓவியக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அடுத்த நாள் கேலு சரண்மகாபாத்ராவின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது. அதற்கு மறுநாள் எம்.எஸ்.ஸின் இன்னிசை. பத்ரிநாத் முதல் ராமேச்வரம் வரை பாரத நாட்டில் எங்கு சென்றாலும் எம்எஸ்ஸின் குரலைக் கேட்கிறோம். அன்றைய தினம் பாரத நாட்டின் எல்லாப் பிரதேச மொழிகளிலும் பக்தி பரவசமாகப் பாடி ரசிகர்களை மெய்மறக்கச் செய்தார் எம்.எஸ்.

**பா**ரத் பவன் நிறுவனத்தின் உயிர் நாடியாக விளங்கி அதை ஆர்வத்துடன் வளர்த்து வருபவர் அசோக் வாஜ்பாயி. கோடிக்கணக்காகச் செலவழித்து மிகப் பெரிய அளவில் கட்டடங்களைக் கட்டியிருக்கிறார்கள். ஏரியைப் பார்த்த வண்ணம் திறந்த வெளி அரங்கம். கண்காட்சிகள் நடத்த விசாலமான இடம், பல்லாயிரக்கணக்கான பயனுள்ள புத்தகங்களைக் கொண்ட நூலகம்—எல்லாம் பாரத் பவனில் இருக்கின்றன. விழாவும் பாரத் பவன் வளாகமும் நம்மைப் பிரமிப்பில் ஆழ்த்தின.

அது சரி, எம்.எஸ்.ஸுக்கு அளிக்கப்பட்ட பரிசுத் தொகை...? கையில் வந்து சேர்வதற்கு முன்பே அது நற்பணிக்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதற்காகக் காஞ்சி முனிவரின் பாத கமலங்களில் சதாசிவம் – எம்.எஸ். தம்பதி சமர்ப்பித்து விட்டனரே!

— நமது நிருபர்

# ஜெ - ஜா: யார் புத்திசாலி?



* வெளுத்து வாங்குகிறார்!



தலைநகர் நிருபர்



* பயங்கரவாதப் போக்கு



திசை புரியாமல்



* பதவி மறுக்கிறார்!



* எதிர்ப்பு நியாயமா?

## நீங்கள் கேட்டவை — தராசு

* கே. வேல்சாமி, மதுரை.

? சில அமைச்சர்கள் நிருபர்களை மதிப்ப தில்லையே, ஏன்?

! பெரிய துரை என்கிற நினைப்பு!

* ராமு, சென்னை.

? கே. ஸ்ரீனிவாசன், மறைவு குறித்து?

! பல தேசிய நாளிதழ்களில் பணியாற்றி, பழுத்த அனுபவம் பெற்று, 74 வயதிலும் ஓடி அலைந்து தகவல்கள் சேகரித்த இளைஞர். எமர்ஜென்ஸியை எதிர்த்ததுடன், தமது மகனையும் அதன் கொடுமைகளுக்குப் பலி கொடுத்தவர். ஆயினும், அதற்காக அடுத்து வந்த அரசில் ஆதாயம் ஏதும் தேடாதவர். கட்சி சார்பற்று, அஞ்சா நெஞ்சத்துடன் தெளிவாக எழுதிய கே. ஸ்ரீ., எல்லா அரசியல் தலைவர்களாலும் மதிக்கப் பெற்றவர். சென்ற வாரம் ராஜீவ் கவர் ஸ்டோரியை அவர்தான் எழுதியிருக்க வேண்டும். 'உடல் நலமில்லை. சில காலம் ஓய்வு தேவை. பிறகு கல்கிக்கு ஒரு சிறப்புக் கட்டுரை வழங்குகிறேன்' என்று பதில் எழுதினார். இப்போது அவர் சிறப்பை நாம் எழுதும்படியாகிவிட்டது. கே. ஸ்ரீ.யைப் போல் தலைநகர் நிருபராக இருந்து தமிழில் எழுதக் கூடியவர்கள் பலர் தோன்ற வேண்டும்.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? திருநாவுக்கரசு சட்டசபையில் வெளுத்து வாங்குகிறாரே?

! ஆமாம், அ. தி. மு. க. ஆட்சியின் சாயம் வெளுத்துக் கொண்டுதான் இருக்கிறது.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? போபால் விஷ வாயு விபத்துக்காக யூனியன் கார்பைட் நிறுவனம் 715 கோடி ரூபாய் நஷ்டஈடு தர வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட் கூறித் தீர்ப்பு அளித்திருக்கிறதே...?

! இது மிகவும் குறைவு என்பது பலரது வாதம். ஆனால் ஒரு முக்கிய விஷயத்தைக் கவனிக்க வேண்டும்: இரு தரப்பினரும் ஒப்புக் கொண்டிருக்கும் இந்தத் தொகையை இப்போது ஏற்காமல் வழக்கை வளர்த்துக் கொண்டே போனால் வருஷக்கணக்காக இழுத்தடிக்கும். அதனால் கடைசியில் கஷ்டப் படப்போவது, ஏற்கெனவே விஷவாயுக் கசிவினால் பாதிக்கப்பட்டு அவதிப்பட்டு வரும் போபால் மக்கள்தான். இப்போது முக்கியமான பணி, இந்த 715 கோடி ரூபாயும் உண்மையில் போய்ச் சேர வேண்டியவர்

களுக்குப் போய்ச் சேருகிறதா என்று கவனிப்பதுதான். இதை ஒழுங்காக அரசு நடத்திக் காட்டினாலே போதும். கூடுதல் நஷ்ட ஈடு கிடைத்ததற்குச் சமானம்.

* மு. மதிவாணன், அரூர்.

**? 'பாராளுமன்றத் தேர்தலில் தேசிய முன்னணி கட்சி ஜெயித்தாலும் பிரதமர் பதவியை ஏற்றுக் கொள்ள மாட்டேன்' என்று வி. பி. சிங் கூறுகிறாரே?**

! காங்கிரஸ் உட்கட்சிப் பூசலில் சிக்கித் தவிக்கிறது என்றால் தேசிய முன்னணி, பிரதமர் பதவிக்கான குடுமிப்பிடிச் சண்டையில் சிக்கித் தவிக்கிறது என்பதுதான் வி. பி. சிங் கூறுவதற்கு உள் அர்த்தம். ராஜீவை ஒழித்துக் கட்டுவது, ஆட்சியைப் பிடிப்பது என்பதற்கு அப்பால் இவர்கள் வேறு ஒரு விஷயத்திலும் ஒற்றுமை காணவில்லை — இன்று வரை. இது இன்னொரு ஜனதா பரிசோதனையாகத்தான் முடியப் போகிறது. 'ஆண்டவனே! இந்த நாட்டை இதன் தலைவர்களிடமிருந்து காப்பாற்று!' என்று நாம் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டியதுதான்!

* கோவி. ராதாகிருஷ்ணன், அரக்கோணம்.

**? (அ) சால்மன் ருஷ்டி நூலுக்கு ஈரானில் இத்தனை எதிர்ப்பு இருப்பது நியாயமா? (ஆ) இங்கே இந்து மதக் கடவுளரை இழிவு செய்யும் இத்தனை பேச்சுக்கள், புத்தகங்கள், ஊர்வலங்கள் முதலியன இருக்கிறதே? (இ) வீரமணி போன்ற பகுத்தறிவாளர்கள் ருஷ்டி விஷயத்தில் வாயைத் திறக்காதது ஏன்?**

! (அ) எதிர்ப்புத் தெரிவிக்கும் உரிமையை நாம் மறுக்க வேண்டியதில்லை. ஆனால் அது பயங்கரவாதப் போக்கில் மரண தண்டனையாக இராமல் மிதவாதப் போக்கில் மனமாற்றத்துக்கு உதவுவதாக இருந்தால் நல்லது. அபரிமிதமான எதிர்ப்பு கடைசியில் அத்தகைய எதிர்ப்பு தெரிவிப்பவருக்கே பாதகமாக இருக்கிறது. (ஆ) இந்துமதம் அதிகமான சகிப்புத்தன்மை காட்டுகிறது. எதிர்ப்பு வாதங்கள், ஆஸ்திகப் பிரசாரங்கள் ஆகியவை மூலம் நாம் நாத்திகத்தை முறியடிக்கிறோம். (இ) வீரமணி தலைக்கும் கொமேனி ஒரு விலை வைக்க வேண்டும் என்கிறீரா, என்ன! சேச்சே!

* ஜெகீரா, புன்செய்புளியம்பட்டி.

**? ஆப்கானிஸ்தானத்திலிருந்து சோவியத் துருப்புக்கள் முற்றிலும் விலகிக் கொண்ட நிலையில் அமைதி அங்கு நிலவ வாய்ப்பில்லை போலிருக்கிறதே?**

! அதுதான், 'ஆப்கானிஸ்தானத்தை நட்டாற்றில் விட்டுவிட மாட்டோம்; பாகிஸ்தான் வாலாட்ட ஆரம்பித்தால் ஒட்ட நறுக்கிவிடுவோம்' என்று ருஷ்யா உறுதி அளித்துவிட்டதே! சலசலப்பு அடங்கிவிடும் என்றும் ஆப்கன் மக்கள் தங்கள் வாழ்க்கையைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ள அனுமதிக்கப்படுவார்கள் என்றும் நம்புவோம்.

* சி. தங்கப்பழம், மேலகிருஷ்ணன் புதூர்.

**? ஜெயலலிதா — ஜானகியம்மாள், யார் புத்திசாலி?**

! அரசியலுக்குத் திரும்பி வராமலிருந்தால் நிச்சயம் ஜானகிதான்!

* மேலை பழ. நாகப்பன், சென்னை — 41.*

**? எழுபது சதம் வாக்குப் பதிவு நடந்த இலங்கைத் தேர்தல் பற்றி?**

! எழுபது சதவீத மக்கள் தாங்கள் விடுதலைப் புலிகளைவிட வீரம் மிக்கவர்கள் என்று உணர்த்தினார்கள். தேர்தல் புறக்கணிப்புக் கட்டளையை நிராகரித்தார்கள். ஜனநாயகப் பிரியர்கள் என்பதை நிரூபித்தார்கள். விடுதலைப்புலிகளை அவர்கள் நேசிக்கிறார்கள்; ஆனால் அவர்களுடைய ஆயுதம் தாங்கிய போருக்கு இனி அவசியமில்லை என்று நினைக்கிறார்கள்.

* எஸ். செல்வன், மதுரை.

**? 'நான் பதினோரு ஆண்டு காலமாகத் தன் மானத்தைக் காயப்படுத்தித் தமிழுக்கு இழுக்கு ஏற்படுத்தினேன்' என்று ஆலடி அருணா பேசியிருக்கிறாரே?**

! அவர் மட்டுமென்ன, அ. தி. மு. க.வைச் சேர்ந்த பலரும் இன்று தலைவன் இல்லாக் கப்பலில் உள்ள மாலுமிகளாகத் திக்கு திசை புரியாமல் தவிக்கிறார்கள். குழப்பமடைந்து ஏதேதோ பேசுகிறார்கள். இதனால்தான் தனி நபரை மட்டுமே நம்பி கட்சியோ, ஆட்சியோ, இருக்கக் கூடாது என்றும் உட்கட்சி ஜனநாயகம் மூலம் தளபதிகளும் அவர்களின் வரிசைக்கிரமமும் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றும் சொல்வது. கட்சியின் சிறப்பு அதன் கொள்கைகளாலும் செயல்பாட்டினாலும் மட்டுமே நிர்ணயிக்கப்பட வேண்டும்.

* பி. தனபால், காரைக்கால்.

**? மேற்கிந்தியத் தீவுகளுக்குப் பயணப்படும் நமது கிரிக்கெட் குழுவினருக்கு உங்கள் ஆலோசனை என்ன?**

**! Don't behave like a political party; keep up the team spirit. Good luck!**

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
மேலை. பழ. நாகப்பன்,
ஆரார் பார்மா,
71, எல். பி. ரோடு,
சென்னை — 41.

# வெங்கிளி கிராமத்தில் வேலூர் மாணவர்கள்



* பசுமையான சூழலில் பயிற்சி.

“ஓரே ஒரு கிராமத்திலே ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடம். அந்த ஆரம்பப் பள்ளிக்கூடத்துக்கு எதிர்த்தாற்போலவே ஒரு கள்ளச் சாராயக் கடை வைத்து நடத்தி வருகிறார் ஒரு பெண்மணி. கடைக்கு இரவு பகல் பார்க்காம 'கஸ்டமர்ஸ்' வந்துக்கிட்டேயிருப்பாங்க. குடிச்சுட்டு ஒழுங்கில்லாமல் நடந்துக்குவாங்க. பாடங்களுக்கு நடுவே பிஞ்சுகள் இதையெல்லாம் சினிமாக் காட்சி மாதிரி பள்ளிக் கட்டடத்திலேயிருந்து பார்க்கும். வெளியே விளையாட வரும்போதெல்லாம் 'தேமதுரத்' தமிழில் குடிகாரர்கள் பேசிக் கொள்வதும், அவர்களுக்குள் அடிதடியுமாக... பள்ளிப் பிள்ளைகளின் ஆரோக்கியமான மன வளர்ச்சிக்கு ஒவ்வாத சூழ்நிலை....

''கள்ளச் சாராயம் விற்பவருக்கு அரசியல் பலமும் செல்வாக்கும் இருக்கிறது. அவரை அந்த இடத்தை விட்டு அகற்றவோ, போலீஸைக் கொண்டு நடவடிக்கை எடுக்கச் செய்யவோ முயல்வது வியர்த்தம். இந்த நிலைமையில் இக்குழந்தைகளை நீங்கள் எப்படிக் காப்பாற்றுவீர்கள்...?''

இந்தக் கதை சொல்லப்பட்டதும் கேள்வி கேட்கப்பட்டதும் கல்லூரி மாணவர்களுக்கான பயிற்சி முகாம் ஒன்றில். வடாற்காடு மாவட்டம், வேலூர், ஊரீசுக் கல்லூரி, நாட்டு நலப் பணித் திட்டத்தின் கீழ் இச் சிறப்பு முகாம் வெங்கிளி என்ற கிராமத்தில் நடைபெற்றது. கிராம முன்னேற்றத் தலைமைப் பயிற்சித்திட்டத்தின் கீழ் 'கள்ளச் சாராயக் கடை' பற்றிய பிரச்னை மாணவர்கள் முன் வைக்கப்பட்டது.

சிறுசிறு குழுக்களாகப் பிரிக்கப்பட்ட மாணவர்கள் தங்கள் குழுவினரிடையே கலந்தாலோசித்துச் சில முடிவுகளுக்கு வந்து, பிறகு எல்லாக் குழுக்களின் ஆலோசனைகளையும் அலசி ஆராய்ந்து ஒரு தீர்மானமான முடிவைக் கூறினர்:

'பிரச்னையின் வேரைக் கண்டறிந்து அதைக் களைய வேண்டும். ஒரு பெண் கள்ளச்சாராயம் விற்கும் நிலைக்கு வந்திருக்கிறாள் என்றால் பொருளாதாரம்தான் அனேகமாக அவள் பிரச்னையாக இருக்கும். எனவே எதிர்பலத்தால் அப்பெண்ணைத் தடுக்க முயலாமல் அவளுக்கு வேறு அர்த்தமுள்ள — பொருளாதார ரீதியிலும் பயன் தரவல்ல — பிழைப்பை ஏற்படுத்தித் தருவதுதான்பிரச்னைக்குத்தீர்வு!'—மாணவர்கள் வழங்கிய இந்த முடிவைப் பயிற்சியாளர்களும் ஏற்றுக் கொண்டனர்.

வேறு பல கேள்விகள் கேட்டும் நடைமுறைச் சோதனைகள் வைத்தும் மாணவர்களைச் சிந்திக்கச் செய்ததோடு கிராம முன்னேற்றத் தலைமைக்கான தகுதிகளைப் பட்டியலிட்டு அவற்றை வளர்த்துக் கொள்ளவும் அறிவுரை வழங்கினர். சகிப்புத்

* கிராம முன்னேற்றத் தலைமைக்கான பயிற்சி பெற்ற மாணவர்களில் ஒரு பகுதியினர்.





தொழில் முனைவோருக்கான பயிற்சி பெற்ற குழுவில் ஒரு பகுதி.

தன்மை, அன்பாகப் பழகுதல், தலைமைப் பொறுப்பைப் பாரமாகக் கருதாமல் எளிதாகத் தாங்குதல், கடின உழைப்பு, நேரம் தவறாமை, தியாக மனப்பான்மை, பொதுநல நோக்கு, என்று பல தகுதிகள் பட்டியலிடப் பட்டன.

**ப**ட்டியலைத் தயாரிப்பதில் மாணவர்களும் ஈடுபடுத்தப்பட்டார்கள். பட்டியலில் இடம்பெற்ற குணங்களின் உறைவிடமாக மாணவர்களே வாக்களித்து ஒருவரைத் தேர்ந்தெடுத்தனர். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட ஹரிகிருஷ்ணன் என்ற மாணவரையும் அவரைத் தேர்ந்தெடுத்த மாணவர்களையும் வேலூர், ஊரீசுக் கல்லூரிக்கு நேரில் சென்று சந்தித்து உரையாடினோம்:

''சாதாரணமாக நாட்டுநலப் பணித் திட்டத்தின் கீழ் கிராமங்களில் முகாமிட்டால் அந்தக் கிராமத்துக்கு மாணவர்கள் ஏதேனும் பணி ஆற்றுவது வழக்கம். நீங்களோ வெங்கிளி கிராமத்தில் தங்கி, பயிற்சி பெற்றிருக்கிறீர்கள்... இதனால் அந்தக் கிராமம் ஏதேனும் பயனடைந்ததா?''

''சாலை போடுவது, தெரு கூட்டுவது போன்ற வேலைகளை நாங்கள் அதிகாலை வேளையில் செய்து கொண்டுதானிருந்தோம். மதியம்தான் எங்கள் பயிற்சி வகுப்புக்கள்.''

''இப்பயிற்சி எந்த விதத்தில் உங்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?''

''பொதுவாக எங்கள் ஆளுமை வளர்ச்சிக்கு இப்பயிற்சி உதவியிருக்கிறது என்றாலும் குறிப்பாக, கிராமங்களின் நிலை பற்றி நாங்கள் அனுபவ பூர்வமாக அறிந்து கொண்டோம். நாட்டு நலப்பணித் திட்டத்தின் கீழ் சில சாலைகளைச் செப்பனிட்டு விட்டுப் போகலாம். ஆனால் அந்த உழைப்பின் பலன் தாற்காலிகமானதாக மட்டுமே இருக்கும். மாணவர்களும் ஏதோ ஜாலியாக ஒரு மாறுதலுக்கு அப்பணியைச் செய்து விட்டு அதோடு மறந்துவிடக் கூடும். ஆனால் இப்பயிற்சி முகாம் எங்கள் கவனத்தையும் அக்கறையையும் கிராமங்களின் பக்கம் திருப்பி விட்டிருக்கிறது. எங்களைப் போன்ற படித்தவர்களின் உதவி கிராம மக்களுக்கு அவசியம் தேவை என்று உணர்த்தியிருக்கிறது.''

''மாணவர்களாகிய நீங்கள் கிராம மக்களுக்கு எந்த விதத்தில் உதவ முடியும் என்று நினைக்கிறீர்கள்?''

''உடனடியாக நாங்கள் பெரிதாக ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் நாங்களும் ஒரு நாள் அதிகாரிகளாகவோ அலுவலர்களாகவோ பொறுப்பான பதவி வகிப்போம்.



ஹரிகிருஷ்ணன்: தலைமைக்குத் தேர்வு செய்யப் பட்டவர்.

இப்போதே கிராம வாழ் மக்களுடைய பிரச்னைகளின் பரிமாணம் எங்களுக்கு நன்றாகப் புரிந்திருப்பதால், எங்கள் கையில் அதிகாரம் இருக்கும்போது, அவற்றைத் தீர்க்க எங்களால் ஊக்கத்தோடு உதவ முடியும்.''

''உண்மையில் கிராம முன்னேற்றத் தலைமைக்கான பயிற்சி என்பது நீங்கள் கிராமங்களில் தங்கி மக்களோடு மக்களாக வாழ்ந்து



● பயிற்சியாளர்கள் : சீனிவாசன்

அவர்களுக்கு உதவ வேண்டும், என்பதற்காக அளிக்கப்படுவதல்லவா?''

''ஆமாம். ஆனால் எங்களுக்கென்று சில பொறுப்புகள் உள்ளனவே. அவை முடிந்தவுடன், நாங்கள் ஓரளவு பொருளாதார ஸ்திரத்தன்மை அடைந்தவுடன் எங்கள் முழு கவனத்தையும் கிராமங்களின்பால் திசை திருப்ப முடியும்.''

''இன்று கிராம மக்களுக்கு இருக்கும் மிகப் பெரிய பிரச்னை எது என்று நீங்கள் கருதுகிறீர்கள்?''

''கிராம மக்களுக்குத் தங்கள் பிரச்னை என்ன என்பதே தெரியவில்லை! இதுதான் பெரிய பிரச்னை! அவர்கள் 'இன்றையப் பொழுதை ஓட்டினால்போதும்' என்ற நோக்குடனேயே வாழ்கிறார்கள். அதனால் திட்டமிடுதல், சுகாதாரம், பொருளாதாரம் என்று எல்லாத் துறைகளிலுமே அவர்கள் பின்தங்கியிருக்கிறார்கள். கல்வி அறிவு இல்லாததால் தங்களுக்கு இருக்கும் உரிமைகள் என்ன என்பதுகூட அவர்களுக்குத் தெரிவதில்லை...''

''இந்த நிலை மாறும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''எங்களுக்குக் கொடுக்கப்பட்டது போன்ற பயிற்சியைப் பெற்ற மூன்று



இளைஞர்கள் ஒரு கிராமத்தின் முன்னேற்றத்துக்குத் தங்களை அர்ப்பணித்துக்கொண்டால் நிச்சயம் நிலைமை சீரடையும். இப்படி ஒவ்வொரு கிராமத்துக்கும் மூன்று பேர் கிடைத்தால் இந்தியாவையே மாற்ற முடியும்!''

''இப்போது உங்களுக்கு இருக்கும் ஆர்வமும் மன உறுதியும் சில வருஷங்கள் கழித்தும் மாறாமல் இருக்குமா?''

''இருக்கும் என்றே நம்புகிறோம். இதற்கென்றே **Ex NSS. Volunteers Association** என்ற அமைப்பை ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது.''

இதே முகாமில், இருபத்தைந்து மாணவர்களைக் கொண்ட மற்றொரு குழுவுக்குத் தொழில் முனைவருக்கான பயிற்சி வழங்கப்பட்டது. ஒரு சாக்பீஸைக் காட்டி, 'இதனால் என்ன உபயோகம்?' என்ற கேள்வியுடன் பயிற்சியைத் துவங்கினார்கள் பயிற்சியாளர்கள்.

பல மாணவர்கள் 'கரும்பலகையில் எழுத உதவும்' என்ற மிக வெளிப்படையான உபயோகத்தை மட்டுமே கூற, அவர்களது சிந்தனையைத் தூண்டி, எழுதுவதுக்கும் மேற்பட்ட உபயோகங்களைப் பட்டியலிட்டனர் பயிற்சியாளர்கள்.

'இந்தச் சாக்கட்டியால் அதைத் தயாரிப்பவருக்கும், விற்பவருக்கும், இடைத்தரகருக்கும் லாபம் கிடைக்கிறது' என்று அதன் இறுதியான உபயோகத்தைச் சொல்லி, தொழில் துவங்குவதன் முக்கியத்துவத்தையும் பயனையும் மாணவர்களுக்கு உணர்த்தினார்கள் பயிற்சியாளர்கள்.

இப் பயிற்சியில் பங்கேற்ற மாணவர்கள் தங்கள் அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டனர்.

''ஆரம்பத்தில் ஒரு சுய விசாரணை செய்து கொள்ளும்படி எங்கள் ஒவ்வொருவரையும் தூண்டினார்கள். நான் யார்; என்ன செய்கிறேன்; எதற்காகப் படிக்கிறேன்... போன்ற பல கேள்விகளை எங்களை நாங்களே கேட்டுக் கொண்டு பதில் எழுதினோம். அனேகமாக எல்லோருமே ஒரு நிரந்தர வருமானத்தை விழைந்தே கல்வியை நாடியிருப்பது புரிந்தது.

''இதற்குப் பிறகு சுய தொழில் துவங்குவதன் மூலமும் நிரந்தர வருமானம் பெற முடியும் என்று எங்களுக்கு விளக்கப்பட்டது. தொழில் துவங்குவது என்ற யோசனையைக் கண்டு அஞ்சி, பின்வாங்கத் தேவையில்லை என்பது உணர்த்தப்பட்டது.

''ஒவ்வொருவருக்கும் சில திறமைகள், தகுதிகள் உண்டு, அவற்றுக்கு ஏற்பத் தொழிலைத் தேர்ந்தெடுக்கலாம்; அதனைத் தொடங்க நிதியுதவி பெறலாம்; தன்னம்பிக்கையுடன் செயல்பட்டால் வெற்றிகரமாகத் தொழில் நடத்தி லாபம் சம்பாதிப்பதுடன் பலருக்கு வேலை வாய்ப்பும் அளிக்கலாம் என்பது உணர்த்தப்பட்டது.

''எங்கள் தன்னம்பிக்கையையும் விடா

முயற்சியையும் பரிசோதிக்கவும் வளர்க்கவும் பலவிதமான விளையாட்டுகளில் எங்களை ஈடுபடுத்தினர் பயிற்சியாளர்கள். உதாரணமாக — கண்ணைக் கட்டி விட்டு, ஒன்றன் மீது ஒன்றாகப் பல 'பிளாக்'குகளை அடுக்கச் செய்தனர். பிளாக்குகள் விழ விழ, பொறுமை இழக்காமல் மீண்டும் முயல வேண்டும்.

''இந்தப் பயிற்சியின் மூலம் நாங்கள் சுய தொழில் துவங்குவதற்கு நூறு சதவிகிதம் தயாராகி விடவில்லை எனினும் அவ்வாறு துவங்க விரும்பினால் எப்படிச் செயல்பட வேண்டும் என்றும், தொழில் துவங்குவது நடக்க முடியாத காரியம் அல்ல என்றும் புரிந்து கொண்டுள்ளோம். ஒரு தொழில் முனைவர் எவ்வாறு தம் பணியாளர்களிடம் நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் விளக்கினார்கள். சுய தொழில் துவங்க வேண்டும் என்ற ஆர்வத்தை இப் பயிற்சி ஓரளவுக்கு வளர்த்துள்ளது. எங்களுள் ஒரு மாணவர் பிளாஸ்டிக் கழிவுகளைக் கொண்டு புதிய பிளாஸ்டிக் பொருள்கள் செய்யும் திட்டத்தோடு TIIC—ஐ அணுகியுள்ளார்.''

வெங்கிளி கிராமத்தில் நடந்த இரு பயிற்சி முகாம்களிலும் சுமார் இருபத்தைந்து — இருபத்தைந்து மாணவர்கள் கலந்து கொண்டனர். இவர்கள் அனைவருமே தாமாக முன்வந்து பயிற்சி பெற்ற மாணவர்கள் என்பதைக் கவனிக்கும் போது, அவர்களுடைய தற்போதைய மெய்யான உற்சாகம் தொடர்ந்து நீடித்து, அவர்களுக்கும் நாட்டுக்கும் பயனளிக்கும் என்ற நம்பிக்கை பிறக்கிறது.

— சீதா ரவி.

புகைப்படங்கள்: கே.வி. ஆனந்த்.



கிளார்க் 1: நான் நேற்று லஞ்சம் வாங்கினதை மானேஜர் பார்த்துட்டார்.

கிளார்க் 2: அய்யய்யோ அப்புறம்?

கிளார்க் 1: இரண்டு தடவையா நான் அவருக்குப் பங்கு கொடுக்கலைன்னு சுட்டிக்காட்டி, கவரை அப்படியே பிடுங்கிக்கிட்டுப் போயிட்டார்.

— சியாமளா.

# சுக போகத் தீவுகள் 8

அறைக்குள் கோகிலாவும் தளைய சிங்கமும் தனித்து விடப்பட்டார்கள்.

தளையசிங்கம் ஒரு வகையான அதிர்ச்சியில் இருந்தார். ஒரு காலத்தில் வாயில் எச்சில் வழியத் தான் அண்ணாந்து திரையில் பார்த்து மெய்மறந்த ஒரு சினிமா நடிகை தன்னைக் கூப்பிட்டுப் பேசும் அதிர்ஷ்டம் தனக்கடிக்கும் என்று அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார்தான். இரண்டாவது, முதல்வருக்கே மிகவும் வேண்டப்பட்ட அந்தப் பெண்மணி, சின்னஞ்சிறு வட்டாரத்தில், ஒரு சின்னஞ்சிறிய கட்சியின் செயலாளராக இருக்கும் தன்னைக் கூப்பிட்டுச் சந்திக்கும் வாய்ப்பு தனக்கு ஏற்படும் என்பதையும் அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார். முழு சுரணை இன்றியே, ''வணக்கம்'' என்று பதில் மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார் தளையசிங்கம்.

''உட்காருங்கள் மிஸ்டர் தளையசிங்கம்'' என்று கட்டிலின் ஒரு பகுதியைச் சுட்டினாள் கோகிலா. அறையின் ஒரு பாதியை அடைத்துக் கொண்டிருந்தது இருவர் படுக்கும் அந்தக் கட்டில். அதை அடுத்து, வசதியான இரு சோபாக்கள் போடப்பட்டிருந்தாலும், தளையசிங்கத்தைப் படுக்கையிலேயே அமரச் சொன்னாள் கோகிலா. படுக்கையின் ஒரு முனையில் சௌகர்யமாகச் சாய்ந்து அமர்ந்தாள் கோகிலா. எதிர் முனையில் பட்டும் படாதவாறு அடக்கமாக அமர்ந்தார் தளையசிங்கம்.

''மிஸ்டர் தளையசிங்கம். உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். ரொம்ப நேர்மையான, உண்மையாக உழைக்கும் அரசியல்வாதி என்று சென்னைக்கு இங்கிருந்து வருபவர்கள் எல்லாம் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் எதிர்க்கட்சிக்காரர். இருந்தாலும், நல்லது யாரிடமிருந்தாலும் பாராட்ட வேண்டும் அல்லவா? மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும் என்று அண்ணா சொன்னது இதைக் குறிக்கத்தானே? முக்கியமாக அதற்காகத்தான் உங்களைப் பார்க்க அழைத்தேன். நல்லவர்களைப் பார்ப்பதே அரிதாகிவிட்டதே, இந்த நாளில்...'' என்றவள் சிரித்தாள்.

''ஏதோ மக்களுக்கு என்னால் ஆனதைச் செய்கிறேன்'' என்றார் அவர், அடக்கமாக.

''பாருங்கள். நீங்கள் எவ்வளவு அடக்கமாகப் பேசுகிறீர்கள். எப்போதும் முற்றிய கதிர்தான் தலை வணங்கி நிற்கும். முளைத்து மூன்று இலை வராததுதான் சும்மா கிடந்து துள்ளும். முதல்வர் கூட, ஒரு சந்தர்ப்பத்தில் உங்களைப் பற்றிச் சந்தோஷத்துடன் குறிப்பிட்டார்.''

''என்ன, என்ன, முதல்வர் என்னைப் பற்றிப் பேசினாரா?

''ஆமாம் தளையசிங்கம். நான், தெய்வநாயகம், ஒரு அமைச்சர், டி.ஜி.பி. மோகனசுந்தரம் ஆகியோர் இருந்த ஒரு சமயத்தில், முதல்வர் உங்களைக் குறித்துப் பேசினார்



என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்...''

தளையசிங்கத்தின் முகத்தில், ஹோலிப் பண்டிகையின் போது, பலப்பல வர்ணம் பூசி நிற்கிற ஒருவனைப் போன்று, பலப்பல உணர்ச்சிகள் வந்து போயின. தாம் உண்மையிலேயே பெரிய மனிதர்தான் போலும்

பிரபஞ்சன்

என்கிற ஓர் எண்ணம் அவருக்குள் ஏற்பட்டது. அதன் பயனாய், கொஞ்சம் நிமிர்ந்து செளகர்யமாய் அமர்ந்தார் அவர்.

''என்ன சாப்பிடுகிறீர்கள். காப்பி, டீ அல்லது ஏதாவது குளிர் பானம்?'' என்று கோகிலா அவரை உபசரித்தாள்.

''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்'' என்றார் தளையசிங்கம், கெளரவமாக.

''இல்லை மிஸ்டர் தளையசிங்கம். அப்பப்பா! என்ன பெயர்? பெயரிலேயே சிங்கம் ஒளிந்திருக்கிறதே... உங்களை எதனாலோ எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது...'' என்று ரகசியம் பேசுகிறவளைப் போலச் சொன்ன கோகிலா, டெலிபோனை எடுத்து ''இரண்டு அருமையான காப்பி'' என்று உத்தரவு கொடுத்தாள். தளையசிங்கம் பல் வரிசை மஞ்சள் கறையோடு வெளிப்பட்டது.

''உங்களிடம் மிகவும் முக்கியமான விஷயம் ஒன்று பேச வேண்டியிருக்கிறது. தளையசிங்கம் சார், முதல்வர் உங்களிடம் தனிப்பட்ட முறையில் இதைப் பேசச் சொல்லியிருக்கிறார். சுமார் ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு — உங்கள் பகுதியில் — ஏற்படுத்தத் தக்க ஒரு புதிய திட்டத்தை முதல்வர் மனத்தில் கொண்டிருக்கிறார். பலப்பல ஏக்கர் நிலம் வேண்டும். உங்கள் பகுதி மக்கள் பலனடைய வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். நீங்கள் முன்னிருந்து, விற்கத் தயாராக இருக்கிறவர்களிடம் பேச வேண்டும். மறுப்பவரை இணங்கச் செய்ய வேண்டும். கலெக்டர் உங்களுக்கு உதவுவார். எதிர்காலச் செளகர்யங்களை நினைத்துப் பார்த்து இதை நீங்கள் செய்ய வேண்டும். நான் சொல்வது உங்களுக்குப் புரியும் என்று நினைக்கிறேன்.''

தளையசிங்கத்துக்கு அது புரியாமல் இல்லை. அவர் முன் கை எடுத்தால் காரியம் மிகச் சுலபமாகவே முடியும். உண்மையில் விற்க விருப்பப்படும் விவசாயிகளையும்





''நம்ப தலைவர் கூட இவருக்கு ரொம்பஒட்டுதல்னு எதைவைச்சுச்சொல் றீங்க?''

''தலைவர் சோடா குடிச்சா இவர் ஏப்பம் விடுறாரே!''

— கமுதி எஸ். சேதுராமன்.

தடுத்து நிறுத்திக் கொண்டிருப்பவர் அவர் தான்.

''நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். ஏதோ ஓர் அந்நிய நாட்டுத் த னி யா ர் கம்பெனி இங்கு கடல் பாலம் கட்டவும், நட்சத்திர ஓட்டல் கட்டவுமே அந்த இடத்தை நீங்கள் வாங்குவதாகவும், அதுவும், நம் மாவட்டத்துத் தலைவர் தெய்வநாயகம் தன் மைத்துனன் பெயரில் அதை வாங்கி, அந்த அந்நிய நாட்டுக் கம்பெனிக்குப் பல மடங்கு லாபம் வைத்து விற்க இருப்பதாகவும் நான் கேள்விப்பட்டேனே...

காப்பி எடுத்துக் கொண்டு வந்த பையனி டமிருந்து, காப்பியைப் பெற்று, அவன் சென்றவுடன், கோகிலா தளையசிங்கத் தைப் பார்த்து மதுரமாகச் சிரித்தாள். பிறகு சொன்னாள்.

''சாப்பிடுங்கள்.''

அவர் சாப்பிட்டார், சிந்தித்தபடியே!

''உங்களிடம் சொல்வதற்கென்ன, மிஸ்டர் தளையசிங்கம். ஒரு சமயம், உங் களுக்கு ஏதேனும் அபாயம் ஏற்படுமோ என்று கூட நான் அஞ்சிக் கொண்டிருந் தேன்...''

''அபாயமா... எனக்கென்ன அபாயம் வர முடியும்?''

''ஏதோ ஒரு வழக்கில் உங்களைச் சம்பந் தப்படுத்தியிருக்கிறார்களே.. முதல்வர் டி.ஜி.பி.யுடன் பேசினார் என்றேனே, அது என்ன என்று நீங்கள் கேட்கவில்லையே! உங்கள் தம்பி ஏதோ மர்மமான முறையில் இறந்து விட்டதாகவும், அது கொலையாக இருக்கலாம் என்றும், வாரிசு இல்லாத அவர் சொத்தை, நீங்கள் அனுபவிப்பதாகவும், உங்கள் தம்பி மனைவி உங்களுடன் — அதா வது உங்கள் வீட்டிலேயே இருப்பதாகவும், எல்லாம் நான் கேள்விப்பட்டேன். டி.ஜி.பி. அதாவது டைரக்டர் ஜெனரல் ஆஃப் போலீஸ், அதாவது, போலீஸ் துறையில் நம்பர் ஒன் ஆசாமி, முதல்வரைப் பார்க்க வந்திருந்தார் என்று சொன்னேனே, அப் போது அந்தப் பேச்சு அடிபட்டது....''

''மேடம்!'' என்றார் தளையசிங்கம் அவசரமாய். மேலே மின்விசிறி மிக வேக மாகச் சுற்றிக் கொண்டிருந்தது. எனினும், கைக் குட்டையை உருவி முகத்தைத் துடைத் துக் கொண்டார், அவர்.

''அது கொலை இல்லை மேடம். வரப் பில் தடுக்கி விழுந்தல்லவா என் தம்பி செத்தான். அவன் மனைவி, பாவம், சின்னப் பெண், கஷ்டப்படுகிற குடும்பத் துப் பெண் என்றல்லவா நான் அழைத்துக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு கஞ்சி ஊற்றுகிறேன். ஐயோ, இது என்ன பழி?''

''நான் நம்புகிறேன், மிஸ்டர் தளைய சிங்கம். ஏன், முதல்வர் கூட நம்புகிறார். ஆனால், விவகாரம் என்று வந்தால், அது எப்படிக் கிளைத்து, எப்படிக் காய்த்து, பழுக்கும் என்பதையும் நாம் அறிவோம் தானே...? உங்கள் தம்பி தடுக்கி விழுந்தார் என்கிறீர்கள். உண்மையாக இருக்கலாம். ஆனால், மருத்துவக் குறிப்பு, நெஞ்சில் பலத்த அடிபட்ட காரணத்தால், இருதயம் நின்றது என்றல்லவா இருக்கிறது. கீழே விழுந்தாலும், அந்த மாதிரி அடிபடும் சாத்தியம் உண்டுதான். மருத்துவ அறிக்கை மேலும், கூர் இல்லாத தட்டையான ஆயுதத் தால் தாக்கப்பட்டாலும், இம் மாதிரி மரணம் சம்பவிக்கும் என்றும் கூறுகிறது! அந்த நேரத்தில் நீங்கள் ஒருத்தர்தான், அந்த இடத்தில் மம்மட்டியோடு இருந்திருக்கிறீர் கள்.''

''அம்மா. நான் வாய்க்கால் வெட்டிக் கொண்டிருந்தேன்'' என்றார் தளைய சிங்கம், அழாக்குறையாக.

''எனக்குப் புரியாதா, தளையசிங்கம். ஆனால், சாட்சியங்கள்? அவை உங்களுக் குச் சாதகமாக இல்லையே! நம் சட்டத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா? ஒருத்தனை 'யோக்கியன் என்று நாம் சொன்னால்', 'இன்னும் அவனுக்கு அயோக்கியத்தனம் செய்ய வாய்ப்புக் கிடைத்திருக்காது' என்றோ, 'அவன் செய்த அயோக்கியத் தனம் வெளியே வராமல் இருக்கலாம் அல் லவா' என்றும்தானே சட்டம் சொல்லும். அப்புறம், அந்த இளம் பெண்ணை வேறு வீட்டில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள், மனைவியை இழந்த நீங்கள். பொறுங்கள். உங்கள் வயது நாற்பத்தாறு. ஐப்பசி மாச அடை மழையில், பிறந்தவர் நீங்கள் என்று எனக்குத் தெரியும். விவகாரங்களுக்கு வயது ஒரு தடையா என்றல்லவா சட்டம் கேட்கும். நீதி தேவதைக்குக் கண்ணைக் கட்டி வைத்திருப்பதை நீங்கள் பார்த்ததில் லையா?''

நாணயத்துக்கு அடையாளமாக எப் போதும் வெள்ளைச் சட்டையும், கௌரவத் துக்கு அடையாளமாகத் தோள் துண்டும், உண்மை உழைப்புக்கு அடையாளமாகப் புகழையும், நல்ல வாழ்க்கைக்கு அடையாள மாக ஆரோக்கியத்தையும் கொண்டிருந்த தளையசிங்கம் தலை கவிழ்ந்து அமர்ந்திருந் தார். குன்றிப் போய், அச்சம், அவமானம் போன்ற பல உணர்ச்சிகளில் ஆட்பட்டிருந் தார்.

''மிஸ்டர் தளையசிங்கம்.. நிலைமை யைச் சொன்னேனே தவிர, நாங்கள் இருக் கும் வரை என்ன நடந்துவிடும் என்கிறீர் கள்? எனக்கு அது பற்றி ஒன்றுமில்லை.

உங்கள் அரசியல் வாய்ப்பு தட்டிப் போய்க் கொண்டு இருக்கிறதே என்பதுதான் என் கவலை.''

தளையசிங்கம் அமைதியாக எழுந்து, மேஜைமேல் இருந்த கண்ணாடிக் கூஜாவில் இருந்த தண்ணீரைக் கிளாசில் ஊற்றி 'மடக் மடக்'கெனச் சத்தம் வரக் குடித்தார்.

''எனக்கும் உங்கள் கையால் ஒரு டம்ளர் தண்ணீர் கொடுங்களேன்.''

அவர் மிகப் பவ்யமாகத் தண்ணீரைக் கொண்டு வந்து கோகிலாவுக்குக் கொடுத்தார்.

''ரொம்பநன்றி'' என்றபடி கிளாசிலிருந்த தண்ணீரைத் தூக்கிக் குடித்தாள் கோகிலா. குடித்து விட்டு அவரைப் பார்த்து அழகாகச் சிரித்தாள்.

''தளையசிங்கம்... நீங்கள் எதிர்க் கட்சிக் காரர்தான். இருக்கட்டுமே! ஆனால், எங்களுக்கு உங்கள் தகுதி தெரியும். உங்களுக்குப் பின்னால் வந்த பையன்கள் எல்லாம் எம்.எல்.ஏவாகச் சட்டமன்றத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். நிஜமான அரசியல் உழைப்பாளி நீங்கள். இன்னும் மம்மட்டி பிடித்துக் கொண்டு வேலை செய்கிறீர்கள்! எந்தக் கட்சியாகத்தான் இருக்கட்டுமே. இது என்ன நியாயம்? உங்கள் கட்சி வேட்பாளர் பட்டியல் வந்த போது நான் முதல்வர் பக்கத்தில் தான் இருந்தேன். அவர் கொதித்துப் போனார். என்னைப் பார்த்து, 'என்ன கோகிலா, நீங்களே சொல்லுங்கள். தளையசிங்கம் போன்ற உண்மை அரசியல்வாதிக்குச் சீட் கூடக் கிடைப்பதில்லை. வெறும் மேனா மினுக்கிகளுக்குச் சீட் கொடுக்கப்படுகிறதே. அந்த மனுஷர் நம்மிடம் வந்து தொலைந்தாலாவது, நாம் 'சீட்'டும் கொடுக்கலாம். ஏன் ஒரு பதவி கூடக் கொடுக்கலாம். மந்திரி பதவி. அவர் சார்ந்த ஜாதிக்கு, ஒருத்தருக்குப் பதவி கொடுத்துத்தானே ஆக வேண்டும். அவரை விட்டால் வேறு யார்? ஆனால், அந்த மனுஷர் கட்சி மாற மாட்டாரே... மகா ரோஷக்காரனாயிற்றே என்று சொன்னார். சத்தியமாகச் சொல்கிறேன். உங்களை நாங்கள் எங்களவராகத் தான் பார்க்கிறோமே தவிர, எதிரியாகப் பார்க்கவில்லை. எங்கள் வருத்தமெல்லாம், நரியும், நண்டும் நாட்டாண்மை பண்ண, சிங்கங்கள் கை கட்டி ஜீவிக்கின்றனவே என்பதுதான். எனக்கொரு சந்தேகம். ஏன் சார். நீங்கள் 'சீட்டே' கேட்கவில்லையா?''

தளையசிங்கம் விருட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''கேட்கவில்லையா? கேட்டேன் மேடம். எங்கள் கட்சி மாநிலத் தலைவரே என்னை விண்ணப்பம் கொடுக்கச் சொன்னார். கொடுத்தேன். மாநிலக் கவுன்சிலும் அதை அங்கீகரித்தது. கடைசியில் மேலிடத்தில் அது நிராகரிக்கப்பட்டு விட்டது.''

''ச்ச்ச்... என்று தன் அனுதாபத்தைக் காட்டினாள் கோகிலா.

''நாங்கள் ஒரு நல்ல அரசியல்வாதியை இழந்து விட்டோம்'' என்றவள், திடீரென்று நினைத்துக் கொண்டது போலக் கேட்டாள்.

''ஆமாம்... உங்கள் பையனுக்கு இன்ஜினீயரிங்கில் 'சீட்' கிடைத்ததா? முயற்சி செய்தீர்களே....''

தளையசிங்கம் ஆச்சர்யத்தால் ஸ்தம்பித்துப் போனார்.

''அது எப்படி உங்களுக்குத் தெரியும்?''

''உங்களைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும்'' என்று கண்ணைச் சுழற்றியபடி சொன்னாள் கோகிலா. இந்த மாதிரி கண்ணைச் சுழற்றி, 'பக்'கென்று சிரிப்பது கோகிலா ஸ்டைல் என்று பழைய சினிமா ரசிகர்கள் அறிவர். அந்த சேஷ்டைகளே அந்தக் காலத்து இளைஞர்களை ஆவி இழக்கச் செய்த ஒன்று. தளையசிங்கமும் அந்தக் காலத்துச் சினிமா ரசிகர்தானே!

''தளையசிங்கம்.. நாளையே கலெக்டரைப் பாருங்கள். அவர் காலேஜ் சீட்டுக்கு ஏற்பாடு செய்வார். அவரும், பிரின்சிபாலும் ஒரு ஜாதி தெரியுமா? கொஞ்சம் தூரத்துச் சொந்தமும் கூட! பாவம், உங்கள் பையன். தாயில்லாப் பிள்ளை. அவன் எதிர் காலத்தை நீங்கள் கவனிக்க வேண்டாமா?''

பல்லாண்டுகளுக்கு முன் மறைந்த மனைவியை நினைத்துக் கொண்டு கண்கலங்கினார் அவர்.

**ம**னித மனம் இரும்பாலோ, வைரத்தாலோ, எஃகாலோ ஆனது அல்ல. மிக மெல்லிய, நுண்ணிய உணர்ச்சி நரம்புகளால் ஆனது. பூவின் மூச்சும் அதைப் பலவீனப்படுத்தி விட முடியும். விசுவத்தை ஜெயித்தவன் கூடத் தன் தவ வலிமையை இழக்க நேரும் போது தளையசிங்கம் எம்மாத்திரம்?

அடுத்த சில நாட்களில், அவரே முன்னின்று பேசி, கிரயம் தீர்த்துப் பலப்பல ஏக்கர்களைக் கிருஷ்ணமூர்த்தி பெயருக்கு மாற்றினார்.

கோகிலா புறப்படும் போது, அவளிடம் நெருங்கி வந்து தளையசிங்கம் சொன்னார்.

''முதல்வரோடு பேசி, என்னை உங்கள் கட்சிக்கு அழைத்துக் கொள்ளுங்கள் மேடம்.'' கிருஷ்ணமூர்த்தி அவரைப் பார்க்கப் பிடிக்காமல் காருக்குத் திரும்பினான்.

கோகிலா அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''என் முதல் வேலையே அதுதான். நம் கட்சிக்கு வருகிறீர்கள். அடுத்த தேர்தலில் போட்டியிடுகிறீர்கள். ஜெயிக்கிறீர்கள். மந்திரி ஆகிறீர்கள். சரிதானா?''

ஆனந்தம் பொங்கக் கார்க் கதவைத் திறந்து விட்டார் தளையசிங்கம். கோகிலா அமர்ந்தாள். இரு கை கூப்பி வணங்கினார் அவர். தெய்வ சந்நிதியில்தான் அத்தகைய வணக்கத்தைப் பார்த்திருக்கிறான் கிருஷ்ணமூர்த்தி.

அவன் மனம் வலித்தது.

(தொடரும்)



''யாரோ மது உற்பத்தி மன்னர்களாமே, நம்மகிட்ட விடுங்க, ஒரு கை பார்க்கிறோம்'னு சொன்னா, முதல்வர் ஒரே வெட்டிலே நூறு கோடி ரூபா ஊழலையும் நொறுக்கிட்டாரே...!''



''இன்னாடி அம்மா ராதா, நீ ஒரு கை பார்க்கிறே... அவன் பிரபு வேறே தமுதமுன்னு மொத்தறான்... எனக்கு எல்லா கட்சியும் ஒண்ணு தாண்டி...! என்னை விடுங்க...''

# படம் பழசு : கமெண்ட் புதுசு !

''ஒண்ணாவே இருக்கட்டுமே, ஏன் துண்டு போடறீங்க?''

''இப்ப துண்டு போட்டாலும் அப்புறம் எனக்கு ஒட்டத் தெரியாதாக்கும்... என்ன நீ..''



''ஏங்க கலங்கறீங்க, உங்க ளுக்குத்தான் கலைஞரை நல் லாத் தெரியுமே... ஒரு காமெடி நடிகர் சங்க முன்னேற்ற வாரி யத்தை ஆரம்பிக்கச் சொல்லித் தலைவராயிடுங்களேன்...''

''நானும் அப்படித்தான் நெனைச்சிட்டிருந்தேன்... ஆனா இருக்கிற வாரியங் களுக்கே தலைவலி வந்திட் டுதே!''





''எத்தனை நாழி உன் படத் தையே பேப்பர்லே பார்த்துக் கிட்டிருப்பே; நானும்தான் வள்ளுவர்கோட்டத்திலேகலை ஞர் பாராட்டுக் கூட்டத்தில் பேசினேன்... அதைப் படிக்கி றேனே....''



''என் பிள்ளைங் களை விடுங்க; இப்படி பண்ணிப்புட்டாங்க... போவட்டும், உங்க புள் ளைங்க செளக்கி யமா?''

கமெண்ட்: 'கடுகு'

# மகா சிக்கனம்



ஒரு கெல்விநேட்டர் ரெஃப்ரிஜெரேட்டரில் மிகவும் சிக்கனமான ஒரு விஷயம்.

அது மிகவும் குறைவாக மின்சாரத்தை உபயோகிப்பதுதான். 'மின்சாரத்தை மிச்சப்படுத்தும்' கம்ப்ரெஸ்ஸர் இருப்பதுதான் அதற்குக் காரணம். தன பெயருக்கேற்ப இயங்குகிறது அது. நீங்கள் இயக்கத் தொடங்கியதுமே, சேமிப்பும் தொடங்கி விடுகிறது.

'மின்சாரத்தை மிச்சப்படுத்தும்' கம்ப்ரெஸ்ஸர் சேமிப்போடு நின்று விடுவதில்லை. வெளிப்புறத் தட்ப வெப்பம் எப்படி இருந்தாலும் அது விரைந்து குளிரச் செய்கிறது; சீக்கிரம் ஐஸ் உண்டாக்குகிறது. வோல்டேஜ் எவ்வளவு கூடினாலும் குறைந்தாலும், அதன் அமைதியான இயக்கம் தடைப்படுவதில்லை.

மற்றுமொரு அதிசயமும் அளிக்கிறது. கெல்விநேட்டர் அதுதான் பொருட்களை வைப்பதற்கான இடவசதி அதிக அளவு இடவசதிக்காக மூடிய முடுக்குகள் இன்றி மிகவும் கவனமாக வடிவமைக்கப்பட்டுள்ளது இதன் உட்புறம்.

வலிமை மிக்கது, எல்லாமே எஃகினாலான கூடுமானமும், திடமான ஏனெல் லேயரும் சேர்ந்து உட்புறத்துக்கும் வெளிப்புறத்துக்கும் கூடுதல் மெருகூட்டுகிறது. எனவே நீண்டகாலம் உழைக்கிறது.

மேலும், நீங்கள் தேர்ந்தெடுக்க வசதியாக கண்ணைக் கவரும் வண்ணங்களில் பற்பல மாடல்கள்.

ஆகவே, கெல்விநேட்டர் ரெஃப்ரிஜெரேட்டர் உங்களுக்கு எல்லா சௌகரியங்களையும் அளித்து, பணத்தை சேமிப்பதோடு, பாதுகாவலனாகவும் திகழ்கிறது.

விற்பனை செய்து சேவை செய்வோர்:
**எக்ஸ்போ மெஷினரி லிமிடெட்**
பிரகதி டவர், 26, ராஜேந்திரா ப்ளேஸ்,
புது டெல்லி-110 008.






Mudra-4711 Dil TM

## கெல்விநேட்டர்

ரெஃப்ரிஜெரேட்டர்

"மிகவும் விரைவாக குளிர்பதனப்படுத்துவதில் ஈடு இணையற்றது."

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 24

## இளவரசியின் அவசரம்



ளவரசிகளை உபசரித்து வரவேற்றுப் பீடங்களில் உட்காரச் செய்த பிறகு அநிருத்தர் தாமும் அமர்ந்தார்.

''தேவி! என்னைப் பார்க்க வேணுமென்று சொல்லி அனுப்பினால் நானே வந்திருக்க மாட்டேனா? இவ்வளவு அவசரமாக வந்த காரணம் என்ன? சக்கரவர்த்தி சௌக்கியமாயிருக்கிறார் அல்லவா?'' என்று கேட்டார்.

''சக்கரவர்த்தியின் தேக சுகம் எப்போதும் போலிருக்கிறது, ஐயா! ஆனால் மனசுதான் கொஞ்சமும் சரியாக இல்லை. நேற்று இரவு அடித்த கடும்புயல் தந்தையின் மனத்தை ரொம்பவும் பாதித்திருக்கிறது. இராத்திரியெல்லாம் அவர் தூங்கவில்லை. குடிசைகளில் வாழும் ஏழை எளிய மக்கள் என்ன கஷ்டப்பட்டிருப்பார்கள் என்பதை எண்ணி அடிக்கடி புலம்பினார். பொழுது விடிந்தவுடன் தங்களைப் போய்ப் பார்க்கும்படி சொன்னார். புயலினால் கஷ்ட நஷ்டம் அடைந்தவர்களுக்கெல்லாம் உடனே உதவி அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமாம். அதைத் தங்களிடம் சொல்லுவதற்காகவே முக்கியமாக வந்தேன்!'' என்றாள் இளையபிராட்டி குந்தவை.

''தேவி! இந்த எளியவனால் என்ன செய்ய முடியும்? முதன் மந்திரி என்ற பெயர்தான் எனக்கு என்பது தங்களுக்குத் தெரியாதா? பெரிய பழுவேட்டரையர் இந்தச் சமயம் ஊரை விட்டுப் போயிருக்கிறார். பொக்கிஷத்தை இறுக்கிப் பூட்டிக் கொண்டு தான் போயிருப்பார். அவருடைய சம்மதமின்றிக் காலாந்தக கண்டரால் கூடப் பொக்கிஷ சாலையைத் திறக்க முடியாதே! கஷ்ட நஷ்டங்களை அடைந்தவர்களுக்கு நான் என்ன உதவி செய்ய முடியும்? வாசலில் பலர் வந்து காத்திருப்பதைத் தாங்கள் பார்த்திருப்பீர்கள். ஆனால்

அமரர் கல்கி

அவர்களைப் பார்ப்பதற்கே எனக்கு வெட்கமாயிருக்கிறது. அதனால்தான் வெளியில் செல்வதற்கே தயங்கிக் கொண்டிருக்கிறேன்'' என்று அநிருத்தப் பிரம்மராயர் பஞ்சப் பாட்டுப் பாடினார்.

''ஐயா! அதைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். என்னுடைய சொந்த உடைமகள் அனைத்தையும் கொடுக்கிறேன். என் அன்னையும் அவ்விதமே கொடுக்கச் சித்தமாயிருக்கிறார்கள். சக்கரவர்த்தியின் அரண்மனையில் உள்ள எல்லாப் பொருள்களையும் தாங்கள் எடுத்துக் கொள்ளலாம். தந்தை அவ்விதம் சொல்லி அனுப்பினார்கள். ஏழைகளின் கஷ்டங்களுக்குத் தாற்காலிக சாந்தியாக வேனும் ஏதேனும் ஏற்பாடு செய்யுங்கள்.....''

''தங்களுடைய சொந்த உடைமைகள் யானைப் படைக்குச் சோளப் பொரி கொடுத்ததாகவே இருக்கும். சோழ நாடு முழுவதும் நேற்றுப் புயல் அடித்திருக்கிறது. எங்கெங்கே என்னென்ன நேர்ந்திருக்கிறது என்ற செய்திகளே இன்னும் கிட்டவில்லை. இதோ நிற்கிறானே, என் பரமானந்த சீடன், இவன் பெரும் பயங்கரமான செய்தியைச் சொல்லுகிறான். கடல் பொங்கி எழுந்து கோடிக்கரை முதல் நாகைப்பட்டினம் வரையில் கடலோரமுள்ள ஊர்களையெல்லாம் மூழ்கடித்து விட்டதாம்......!''

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அங்கிருந்த மூன்று பெண்களின் முகங்களும் பீதிகரமான மாறுதலை அடைந்ததை அநிருத்தர் கவனித்தார். உடனே அவர் தொடர்ந்து ஆறுதலாகக் கூறினார்.

''ஆனால் அதை நான் நம்பவில்லை. இவன் கூறுவது வெறும் வதந்திதான். புயலைக் காட்டிலும் வேகமாக வதந்தி பரவியிருக்கிறது. கடற்கரைப் பகுதியிலிருந்து செய்தி வருவதற்கே இன்னும் நேரமாகவில்லை. குதிரை மீது தூதர்கள் வந்தாலும் இன்று மத்தியானத்துக்கு மேலேதான் இங்கு வந்து சேர முடியும். இதற்கிடையில் நம்மால் செய்யக் கூடிய உதவிகளையெல்லாம் செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம்.''

இளைய பிராட்டி குந்தவை தன் மனக் குழப்பத்தைச் சிறிது சமாளித்துக் கொண்டு, ''ஐயா! நாகைப்பட்டினம் பற்றிய வதந்தி என் காதிலும் விழுந்தது. அதைப் பற்றியும் தங்களிடம் பேசலாம் என்று வந்தேன். இப்போதுதானே சூடாமணி விஹாரத்துக்கு நாம் நிவந்தங்கள் அளித்து விட்டு வந்தோம்? விஹாரத்துக்கு விபத்து நேர்ந்தால், பாவம், அதில் உள்ள பிக்ஷுக்கள் என்ன செய்வார்கள்? '' என்று கூறிவிட்டு, பூங்குழலி நின்ற இடத்தை நோக்கினாள்.

''ஐயா! இந்தப் பெண் இங்கே எப்படி வந்தாள்? கோடிக்கரைத் தியாகவிடங்கரின் மகள் பூங்குழலி அல்லவா இவள்? '' என்று வினவினாள்.

''ஆமாம்; தியாகவிடங்கரின் குமாரிதான். ஆனால் அவரைப் போல் சாதுவல்ல. ரொம்பப் பொல்லாத பெண். தனக்குச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுத் தொந்தரவு விளைவிப்பவள்!'' என்றார் முதன் மந்திரி.

இளையபிராட்டிக்கு வேறு வித ஐயப்பாடு தோன்றியது. அருள்மொழியைப் பற்றி உளவு அறிவதற்காகத்தான் பூங்குழலியை இங்கே அநிருத்தர் தருவித்திருக்கிறாரோ? தந்திர வித்தைகளில் கைதேர்ந்த மந்திரியாயிற்றே? எப்படியிருந்தாலும் பூங்குழலியின் சார்பில் தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு, ''அப்படியொன்றுமில்லையே? பூங்குழலி மிக நல்ல பெண் ஆயிற்றே! இங்கே, வா, அம்மா! முதன் மந்திரி ஏன் உன் பேரில் கோபமாயிருக்கிறார்? அவருக்கு ஏதேனும் தொந்தரவு கொடுத்தாயா? '' என்றாள்.

பூங்குழலி சற்று நெருங்கி வந்து, ''தேவி! முதன் மந்திரியையே தாங்கள் கேளுங்கள்! நான் முதன் மந்திரிக்குத் தொந்தரவு கொடுத்தேனா, அவர்

எனக்குத் தொந்தரவு கொடுத்தாரா என்று கேளுங்கள்!'' என்றாள்.

''ஓகோ! நீயும் கோபமாகத்தான் இருக்கிறாய்! இங்கே வா, பெண்ணே! என் அருகில் உட்கார்ந்து கொள்!'' என்று கூறி இளையபிராட்டி பூங்குழலியைத் தன் அருகில் உட்கார வைத்துக் கொண்டாள்.

''ஐயா! இந்தப் பெண்ணை எதற்காகத் தருவித்தீர்கள்? ஏதாவது முக்கியமான காரியமா? '' என்று கேட்டாள்.

''அம்மணி! நான் இந்தப் பெண்ணைத் தருவிக்கவில்லை. இப்படி ஒரு பொல்லாத பெண் இருக்கிறாள் என்ற செய்தியே எனக்குத் தெரியாது. இவளாகவேதான்...'' என்று அநிருத்தர் தயங்கினார்.

''தேவி! முதன் மந்திரி ஏன் தயங்குகிறார்? மிச்சத்தையும் சொல்லச் சொல்லுங்கள்!'' என்றாள் பூங்குழலி.

''இவளாகவேதான் இவளுடைய அத்தையைத் தேடிக் கொண்டு வந்தாள்!''

''யார் இவளுடைய அத்தை? ஓகோ! சேந்தன் அமுதனின் அன்னையா? கோட்டைக்கு வெளியில் அல்லவா அவர்களுடைய வீடு இருக்கிறது? ''

''இல்லை; அமுதனின் அன்னை இல்லை. இவளுக்கு இன்னொரு ஊமை அத்தை இருக்கிறாள். இளவரசி! தங்களுக்கும் தெரிந்திருக்க வேண்டிய செய்திதான். ஈழ நாட்டுக் காடுகளில் பித்துப் பிடித்தவள் போல் திரிந்து கொண்டிருந்த ஊமை ஸ்திரீ ஒருவர் உண்டு. அந்த மாதரசியை இங்கே ஒரு முக்கியமான காரியத்துக்காக அழைத்து வர விரும்பினேன். அதற்காகப் பெரு முயற்சி செய்தேன். கடைசியில், வெற்றி கிட்டியது. அந்தச் சமயத்தில்.....''



குந்தவை தேவி சொல்ல முடியாத பரபரப்பை அடைந்து, ''உண்மையாகவா? அந்தப் பெண்மணி இப்போது இங்கே இருக்கிறாளா? நான் உடனே பார்க்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே பீடத்தை விட்டு எழுந்தாள்.

''மன்னிக்க வேண்டும், தேவி! வெற்றி கிட்டும் சமயத்தில் இந்தப் பெண் குறுக்கிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டாள்!'' என்றார் முதன் மந்திரி.

குந்தவை மிக்க ஏமாற்றத்துடன் திரும்பவும் உட்கார்ந்து, ''பூங்குழலி! இது உண்மைதானா? என்ன காரியம் செய்து விட்டாய்? '' என்றாள்.

''தேவி! என் அத்தையை அழைத்து வருவதற்கு முதன் மந்திரி கையாண்ட முறையைக் கேளுங்கள். அப்போது என் பேரில் குற்றம் சொல்ல மாட்டீர்கள்!'' என்றாள் பூங்குழலி.

பிறகு, முதன் மந்திரி நடந்தவற்றைச் சுருக்கமாகக் கூறினார்.

கேட்டுக் கொண்டிருந்த இளைய பிராட்டி, ''அப்படியானால், இந்தக் கோட்டைக்குப் பக்கத்திலேதானே எங்கேனும் இருக்க வேணும்? தேடிப் பார்க்கலாமே? '' என்றாள்.

''நல்ல வேளையாகத் தேடிப் பார்க்க வேண்டிய அவசியம் கூட இல்லை. சேந்தன் அமுதன் குடிசையில் இன்று காலையில் பார்த்ததாக என் சீடன் சொல்லுகிறான்'' என்றார் முதன் மந்திரி.

''அப்படியானால், ஏன் வீண் கால தாமதம்! மற்றக் காரியங்கள் எல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். நாமே போய் அழைத்து வருவோம். தாங்கள் வருவதற்கில்லா விட்டால் நான் போய் வருகிறேன். வானதி! புறப்படு, போகலாம்!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் அப்போது குறுக்கிட்டு, ''தேவி! சற்று யோசித்துச் செய்ய வேண்டும். புதிய மனிதர்கள் கூட்டமாய் வருவதைக் கண்டால் அந்த அம்மாள் மிரண்டு ஓடத் தொடங்கி விடலாம். பிறகு, புயலைப் பிடித்தாலும் அந்த அம்மணியைப் பிடிக்க முடியாது'' என்று சொன்னான்.

''ஆம், திருமலை சொல்லுவது சரிதான். நம்மைப் பார்த்ததும் பூங்குழலியின் அத்தை மிரண்டு ஓடத் தொடங்கி விடலாம். நமது பிரயத்தனமெல்லாம் வீணாகி விடும்! நீ என்ன யோசனை சொல்கிறாய், திருமலை!'' என்று முதன் மந்திரி கேட்டார்.

''இந்தப் பெண்மணியையே போய்



அழைத்து வரும்படி சொல்லுங்கள். இந்த உலகத்தில் அந்த மாதரசியைக் கட்டுக்குள் வைக்கக் கூடியவர்கள் இரண்டே பேர்தான்! அவர்களில் இந்தப் பெண் ஒருத்தி!''

''இன்னொருவர் யார்? '' என்று முதன் மந்திரி கேட்டதற்கு, ஆழ்வார்க்கடியான் சிறிது தயங்கி ''இன்னொருவர் கடலில் முழுகி விட்டதாக ஊரெல்லாம் வதந்தியாயிருக்கிறது!'' என்றான்.



ந்தவை தேவி அதைக் கவனியாதவள் போல், பூங்குழலியைப் பார்த்து, ''கரையர் மகளே! உடனே போய், உன் அத்தையை இங்கே அழைத்து வா! அவளுக்கு இங்கே ஒரு கெடுதியும் நேராது. மிக முக்கியமான காரியமாக உன் அத்தையை உடனே நான் பார்க்க வேண்டியிருக்கிறது! எனக்காக இந்த உதவி செய்வாய் அல்லவா? '' என்றாள்.

''ஆகட்டும், அம்மா! முயன்று பார்க்கிறேன். ஆனாலும் முதன் மந்திரி இப்படிப்பட்ட உபாயத்தைக் கடைப்பிடித்திருக்க வேண்டியதில்லை. முன்னாலேயே எனக்குத் தெரிந்திருந்தால்....''

''ஆமாம்; விஷயங்களை மறைத்து வைப்பதில் இம் மாதிரி அசந்தர்ப்பங்கள் நேரத்தான் நேருகின்றன. அதை நானே உணர்ந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். சீக்கிரம் அத்தையை அழைத்துக் கொண்டு வா! அதற்குப் பிறகு இன்னொரு முக்கியமான வேலை உனக்கு இருக்கிறது!'' என்றாள் இளையபிராட்டி.

''திருமலை! நீயும் இந்தப் பெண்ணோடு போய் விட்டு வா! கோட்டை வாசல் வழியாக நீங்கள் வருவதில் ஏதேனும் சிரமம் இருந்தால், நமது அரண்மனைக்கு வரும் இரகசிய வழியில் அழைத்துக் கொண்டு வா!'' என்றார் அநிருத்தர்.

பூங்குழலியும் ஆழ்வார்க்கடியானும் போன பிறகு, குந்தவை முதன் மந்திரியைப் பார்த்து, ''ஐயா! வாசலில் வந்து காத்திருப்பவர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி அனுப்பி விட்டு வாருங்கள். மிக முக்கியமான காரியங்களைப் பற்றித் தங்களிடம் ஆலோசனை கேட்க வேண்டியிருக்கிறது!'' என்றாள்.

''இதோ வந்து விடுகிறேன், தாயே! எனக்கும் தங்களிடம் பேச வேண்டியதிருக்கிறது!'' என்று சொல்லி விட்டு அநிருத்தர் சென்றார்.

இத்தனை நேரமும் மௌனமாக இருந்த வானதி, ''அக்கா! பூங்குழலிக்கு இன்னொரு முக்கியமான காரியம் என்ன வைத்திருக்கிறீர்கள்? மறுபடியும் நாகைப்பட்டினத்துக்கு அனுப்பப் போகிறீர்களா? '' என்று கேட்டாள்.

''ஆம், வானதி! நீ வீணாகக் கவலைப்படாதே! பொன்னியின் செல்வனுக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்து விடாது.''

''நானும் அவளுடன் நாகைப்பட்டினத்துக்குப் போகிறேனே, அக்கா!''

''நீ போய் என்ன செய்வாய்? உன்னைக் காப்பாற்றுவதற்கு வேறு யாராவது வேண்டுமே?''

''அந்த ஓடக்காரிக்கு என்னைக் கண்டால் பிடிக்கவேயில்லை, அக்கா!''

''எப்படியடி அவள் மனத்தை நீ கண்டுபிடித்தாய்? ''

''என்னுடன் அவள் பேசவே இல்லை!''

''நீயும் அவளோடு பேசவில்லை; அவளும் உன்னோடு பேசவில்லை.''

''நான் அடிக்கடி அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் என்னை ஒரு தடவை கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. அவளுக்கு ஏதோ என் பேரில் கோபம்!''

''ஆமாமடி, வானதி! இந்த நாட்டில் உள்ள கலியாணமாகாத கன்னிப் பெண்களுக்கெல்லாம் உன் பேரில் கோபமாய்த்தானிருக்கும். அதற்காக நீ வருத்தப்படுவதில் பயனில்லை'' என்று சொன்னாள் இளையபிராட்டி குந்தவைதேவி.

# அத்தியாயம் 25

## அநிருத்தரின் குற்றம்



முதன் மந்திரி தம் அரண்மனை ஆசார வாசலில் காத்திருந்தவர்களைப் பார்த்துப் பேசி அனுப்பி விட்டு விரைவிலேயே திரும்பி வந்தார்.

"அம்மணி! ஏதோ என்னால் முடிந்த வரைக்கும் ஏற்பாடு செய்திருக்கிறேன். புயலினால் சேதங்களை அறிந்து வர நாலா பக்கமும் ஆட்களை அனுப்பியிருக்கிறேன். சின்னப் பழுவேட்டரையருக்கும் சொல்லி அனுப்பியிருக்கிறேன், நம் இருவரின் பொறுப்பிலும் பொக்கிஷசாலையைத் திறந்து விட வேண்டும் என்று."

"ஐயா! பெரிய பழுவேட்டரையரின் மாளிகையையொட்டி நிலவறைப் பொக்கிஷம் ஒன்று இருக்கிறதாமே! அதில் கணக்கில்லாத பொருள்கள் குவிந்து இருப்பது உண்மையா? பெரிய பிராட்டி ஒரு தடவை சொன்னார்கள்."

"அதைத் திறந்தால் அதிலுள்ள பொருளைக் கொண்டு ஆயிரம் பெரிய கோவில்கள் புதிதாய்க் கட்டலாமே என்று அந்த அம்மாளுக்கு எண்ணம். நான் கூட அந்த நிலவறைக்குள் போனதில்லை, அம்மா! அதற்குள் ஒரு தடவை போகிறவர்கள் உயிரோடு திரும்புகிறதில்லை" என்றார் முதன் மந்திரி.

"அது போகட்டும், ஐயா! அந்த ஊமைத் தாயை இவர்கள் அழைத்துக் கொண்டு வந்து விடுவார்களா? கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போய் விடுமோ என்று எனக்குக் கவலையாயிருக்கிறது" என்றாள் குந்தவை.

"தாயே! அந்த மாதரசியைப் பற்றித் தங்களுக்கு என்ன தெரியும்? எப்படித் தெரிந்தது? தாங்கள் ஏன் அவளைப் பற்றி இவ்வளவு பரபரப்பு அடைந்திருக்கிறீர்கள்....?" என்றார் அநிருத்தர்.

"ஐயா! சில தினங்களுக்கு முன்பு சக்கரவர்த்தியே என்னிடம் அந்த மாதரசியைப் பற்றிச் சொன்னார்."

"என்ன? அவள் உயிரோடிருப்பதாகச் சொன்னாரா, என்ன?"

"இல்லை, ஐயா! இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னார். அவள் இறந்து போய் விட்டதாகவே எண்ணிக் கொண்டிருக்கிறார். அதனாலேதான் அவருடைய சித்தம் கலங்கிப் போயிருக்கிறது. அந்த ஊமைத் தாய் கடலில் விழுந்து இறந்து போய் விட்டதாகத் தாங்கள்தானே தெரிந்து கொண்டு வந்து என் தந்தையிடத்தில் சொன்னீர்களாம்? பின், அந்த மாதரசி உயிரோடிருக்கும் செய்தி தங்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"தங்களை அதே கேள்வி கேட்க வேண்டும் என்று எண்ணினேன். தங்களுக்கு எப்படித் தெரிந்தது, தேவி?"

"அதற்கென்ன, சொல்லுகிறேன். வாணர் குலத்து வீரர் ஈழத்துக்குப் போய்த் திரும்பி வந்தாரே, அவர் முதலில் சொன்னார். பிறகு, என் தம்பி அருள்மொழி..." என்று கூறிவிட்டு, குந்தவை தன் தவறைத் தானே உணர்ந்தவள் போல் வாயைக் கையினால் பொத்திக் கொண்டாள்.

"தேவி! இளவரசர் அருள்மொழிவர்மரைப் பற்றித் தாங்கள் என்னிடம் சொல்ல விரும்பவில்லையென்றால், சொல்ல வேண்டாம். தாங்கள் அந்தப் பெயரைக் குறிப்பிட்டதை நான் அடியோடு மறந்து விடுகிறேன்."

"இல்லை, ஐயா! தங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவது என்ற எண்ணத்துடனேயே வந்தேன். விஷயங்களை மூடி மறைத்து வைப்பதினால் தீமைதானே தவிர நன்மை ஒன்றுமில்லை என்பதைக் கண்டு கொண்டேன். நேற்றிரவு எனக்கு அது நன்றாய்த் தெரிந்தது. ஐயா! என் இளைய சகோதரனைக் கடல் கொண்டு போய் விடவில்லை. பொன்






குழந்தையின் அருமையை அறிந்தவர் தாயன்றி வேறு யார்...

# ஆருயிரான உங்கள் பேரன்புக்கு—
# நூறாண்டு வாழ்த்தும் பராமரிப்பு

ஒரு நூறாண்டு காலமாக உங்களைப் போன்ற தாய்மார்களுக்கு ஒப்பில்லாத குழந்தைப் பராமரிப்புத் துணையாய் உதவுவது ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் தயாரிப்புக்கள் தாம். பாபபாவின் பச்சிள மேனியை நன்கறிந்தவர்கள் ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் தான். எங்களுக்குத் தெரியும் பாப்பாவின் மேனி பூப்போன்றது, புண்படத்தக்கது. ஆகவே தான் ஒப்பற்ற தூய்மைப் பொருட்களால் மட்டுமே அவற்றை உருவாக்குகிறோம். ஒவ்வொரு தயாரிப்பும் பரிசோதனைக்குப் பன்முறை தேறி வருகிறது. எனவே அருமையிலும் அருமையானதே உங்கள் குழந்தைகளை அடைகிறது.

உங்கள் குழந்தையின் பராமரிப்புக்கு வேறு எவரையும் நம்புவீர்களா... நம்பத் தான் முடியுமா?

குழந்தைப் பராமரிப்பு பற்றி இலவசத் துண்டுப் புத்தகம் பெற்றிட எழுதுங்கள் இம் முகவரிக்கு:

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் லிமிடெட், பேபி கேர் அட்வைசர், பி.ஓ. பாக்ஸ் நம்பர் 9301, பம்பாய்-400 036.




ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

LINTAS JJC 1 2533 TM

னியின் செல்வனைச் சமுத்திர ராஜன் காப்பாற்றிக் கரையில் சேர்த்தார். அவன் இப்போது நாகைப்பட்டினத்திலுள்ள புத்த விஹாரத்தில் இருக்கிறான். அவனைப் பார்ப்பதற்காகவே நான் நாகைப்பட்டினம் போயிருந்தேன். ஆனால் தங்களுக்கு இது எல்லாம் தெரியும் என்று எனக்கு ஒரு சந்தேகம் உண்டு.''

''தாங்கள் சந்தேகித்தது நியாயமே. ஆனால் தேவி, தெரிந்ததாக நான் காட்டிக் கொள்ளவில்லையே! வேறு யாருடைய காரியத்தில் தலையிட்டாலும் தங்களுடைய காரியத்தில் தலையிடுவதில்லை என்று வைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய ஆட்களுக்கும் அவ்விதமே கட்டளையிட்டிருக்கிறேன். தாங்கள் செய்வது எதுவும் உசிதமாகத்தான் இருக்கும் என்பது என் நம்பிக்கை. நானும் மலையமானும் கொடும்பாளூர் வேளானும் அடிக்கடி பேசிக் கொண்டிருக்கிறோம்; 'இளையபிராட்டி மட்டும் ஆண் பிள்ளையாய்ப் பிறந்திருந்தால், இந்த அகில உலகத்தையும் சோழர்களின் வெண் கொற்றக் குடையின் கீழ்க் கொண்டு வந்து தனியரசு செலுத்தி ஆண்டு வருவாள்' என்று.''

''அந்த மாதிரி எண்ணம் எனக்கு இருந்தது உண்மைதான். நான் பெண்ணாகப் பிறந்திருந்தபோதிலும் என் சகோதரர்கள் மூலமாக அந்த மனோரதம் நிறைவேறும் என்று ஆசையுடன் இருந்தேன். அந்த ஆசையை இப்போது விட்டு விட்டேன், ஐயா! இராஜ்ய விஷயங்களில் பெண்கள் தலையிடவே கூடாது என்று முடிவு செய்து விட்டேன். பாருங்கள்! என் சகோதரனை நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கும்படி செய்தேன். அதன் விபரீத பலனைப் பாருங்கள்!''

''ஒன்றும் நேர்ந்து விடவில்லையே, தாயே! பொன்னியின் செல்வனை நடுக் கடலில் காப்பாற்றிய சமுத்திர ராஜன் இப்போது கரையில் பத்திரமாயிருக்கும் போது தீங்கு விளைத்து விடுவானா?''

''ஐயா! தாங்கள் உடனே என் தந்





தையிடம் வந்து இவ்வாறு தைரியம் சொல்லுங்கள்.''

''ஆகா! சக்கரவர்த்திக்குத் தெரியுமா, என்ன? இளவரசர் சூடாமணி விஹாரத்தில் இருக்கும் செய்தி!''

''நேற்று இரவுதான் சொன்னேன். சொல்லும்படியாக நேர்ந்துவிட்டது.''

''ஆகா! இன்னும் கொஞ்ச நாள் சொல்லாமலிருந்தால் நன்றாயிருந்திருக்கும். தாங்கள் செய்திருந்தது மிக நல்ல ஏற்பாடு என்று நினைத்தேன். தேவி! சோழ நாடு முழுதும் ஒரே கொந்தளிப்பாயிருக்கிறது. நேற்று அடித்த புயல் காரணமாக வெளியில் ஏற்பட்ட கொந்தளிப்பு, சில நாளாகவே சோழ நாட்டு மக்களின் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருக்கிறது. மதுராந்தகர் மீதும் பழுவேட்டரையர்கள் மீதும் ஜனங்கள் ஒரே கோபமாயிருக்கிறார்கள். சக்கரவர்த்தியைச் சிறையில் வைத்திருப்பதாக எண்ணுகிறார்கள். இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கப்பல்கள் அனுப்பப்பட்டதையும் அறிந்திருக்கிறார்கள். இளவரசரைப் பழுவேட்டரையர்கள்தான் கடலில் மூழ்கடித்து விட்டதாகப் பலர் நம்புகிறார்கள். இச் சமயத்தில் இளவரசர் இந்த நாட்டில் இருப்பது தெரிந்தால் மக்கள் கொதித்து எழுவார்கள். இளவரசரின் தலையில் இப்போதே மணிமகுடத்தைச் சூட்டி விட வேண்டும் என்று பெருங் கிளர்ச்சி செய்வார்கள். பழுவேட்டரையர்களும் சண்டைக்கு எப்போது முகாந்தரம் ஏற்படும் என்று காத்திருக்கிறார்கள். கொடும்பாளூர் பெரிய வேளார் பெரும்படை திரட்டிக் கொண்டு தஞ்சையை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். தேவி! சோழ நாட்டில் இரத்த வெள்ளம் ஓடப் போகிறது என்று அஞ்சுகிறேன். இந்தப் பெரிய சாம்ராஜ்யம் சகோதரச் சண்டையினால் அழிந்து விடுமோ என்று பயப்படுகிறேன். அப்படி ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமென்று அல்லும் பகலும் ஸ்ரீரங்கநாதரைப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன்.''

''என்னுடைய பிரார்த்தனையும் அதுவேதான், ஐயா! என் சகோதரர்

கள் இந்தச் சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் ஏற வேண்டுமென்ற ஆசையை நான் விட்டு விட்டேன். என்னைப் பொறுத்த வரையில், மதுராந்தகனுக்கே முடி சூட்டுவதில் இப்போது எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை.''

''தங்களுக்கு ஆட்சேபமில்லை, தாயே! ஆனால் மக்களுக்கு ஆட்சேபம் இருக்கிறதே! சக்கரவர்த்தி இன்னும் பல்லாண்டு இவ்வுலகில் வாழ வேண்டும். ஆனால் விதி வசத்தினால் அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டதென்றால், அன்றைய தினமே இந்தச் சோழ நாடு முழுதும் ரண களமாகி விடும்......''

''ஐயா! அத்தகைய துர்க்கதி விரைவிலேயே நேர்ந்து விடுமோ என்று எனக்குப் பயம் அதிகமாயிருக்கிறது. நேற்றிரவு சக்கரவர்த்தியின் நிலை மிக்க கவலைக்கிடமாகி விட்டது. அதனாலேதான் அவரிடம் பொன்னியின் செல்வன் பத்திரமாயிருக்கிறான் என்று சொல்ல வேண்டியதாயிற்று. ஆனால், சொல்லியும் அவர் நம்பவில்லை! அவருக்கு நான் வெறுமே ஆறுதல் சொல்வதாக எண்ணிக் கொண்டார். பல வருஷங்களுக்கு முன்னால் மாண்டு போன 'பழிகாரி'யின் ஆவி அவருடைய புதல்வர்களின் மீது பழி வாங்குவதாக எண்ணிப் பிரமை கொண்டு பிதற்றுகிறார்....''

''அந்தோ? கடவுளே! என்ன விபரீதம்? நேற்று இரவு நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லுங்கள்!''

''அதற்காகத்தான் வந்தேன், ஐயா! சொல்லித் தங்களிடம் யோசனை கேட்பதற்காகவே வந்தேன். முன் தடவை சுந்தர சோழர் மருத்துவ சாலை ஏற்படுத்துவதற்காக நான் வந்த சமயத்தில், சக்கரவர்த்தி எனக்கு அந்தப் பழைய வரலாற்றைக் கூறினார். ஈழ நாட்டை அடுத்த தீவில் தாம் ஒதுங்க நேர்ந்த போது, கரையர் மகள் ஒருத்தி தம்மைக் கரடிக்கு இரையாகாமல் காப்பாற்றியது பற்றிச் சொன்னார். பின்னர் அத் தீவிலேயே சில மாத காலம் சொப்பன சொர்க்க லோகத்தில் வாழ்வது போல் அந்தப் பெண்ணுடன் வாழ்ந்திருந்ததைப் பற்றிச் சொன்னார். பின்னர் இந்தத் தஞ்சை புரிக்கு அவர் அழைத்து வரப்பட்டதையும், இளவரசராக முடிசூட்டப்பட்டதையும் கூறினார். அரண்மனை வாசலில் கூடியிருந்த கூட்டத்தின் மத்தியில் கரையர் மகளைப் பார்த்ததையும், ஆருயிர் நண்பராகிய தங்களை விட்டு அவளைத் தேடிக் கொண்டு வரச் சொன்னதையும், தாங்கள் தேடிப் போய்த் திரும்பி வந்து அவள் கடலில் விழுந்து இறந்தாள் என்று தெரிவித்ததையும் கூறினார். அது முதல் அடிக்கடி அந்தக் கரையர் மகள் ஆவி வடிவத்தில் வந்து தம்மைத் துன்புறுத்துவதாகவும் சமீப காலத்தில் அவள் வருகை அதிகமாகியிருப்பதாகவும் சொன்னார்....''

''தேவி! அதையெல்லாம் நீங்கள் நம்பினீர்களா?''

''தந்தை கூறிய வரலாறு அவ்வளவு அதிசயமாயிருந்தபடியால் என் மனமும் மிக்க குழம்பி விட்டது. இறந்து போனவளின் ஆவி வந்து தந்தையைத் தொந்தரவுபடுத்துவது சித்தப் பிரமையாயிருக்கலாம் என்று நினைத்தேன். பிறகு யோசித்துப் பார்க்கப் பார்க்க வேறு சில ஐயங்கள் உண்டாயின. வானதி ஒரு நாள் இரவு சக்கரவர்த்தியின் கூக்குரலைக் கேட்டு விட்டுப் போய்ப் பார்த்தாள். பழுவூர் இளையராணி மாதிரி ஓர் உருவம் மன்னரின் எதிரில் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு மூர்ச்சித்து விழுந்தாள். அது முதல் அந்தக் கரையர் மகளுக்கும் இந்தப் பழுவூர் இளைய ராணிக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்று தோன்றியது. வல்லவரையரும் அருள்மொழியும் கூறியதிலிருந்து அது உறுதியாயிற்று. ஐயா! நந்தினி தேவி ஒரு வேளை அந்தக் கரையர் மகளின் புதல்வியாயிருக்க முடியுமா?''

''தங்களைப் போலவே நானும் ஊகிக்கத்தான் முடியும், தாயே! உருவ ஒற்றுமையைப் பார்த்தால் அப்படித்தான் கருத வேண்டியிருக்கிறது. ஆனால் அதிலிருந்து மட்டும் நிச்சயிக்க முடியுமா? ஒருவேளை கரையர் மகளின் கடைசித் தங்கையாகக் கூட நந்தினி தேவி இருக்கலாம். இதையெல்லாம் பற்றி நிச்சயமாகத் தெரிந்தவர்கள் இப்போது

மூன்று பேர்தான் இருக்கிறார்கள்....''

''அவர்கள் யார், சுவாமி!''

''ஒருவர்தான் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி. அவருடைய உள்ளத்தில் ஏதோ ஒரு இரகசியம் இருந்து வேதனை செய்து வருகிறது. ஆனால் அது இன்னதென்பதை அவராகச் சொன்னாலொழிய, நாம் கேட்டுத் தெரிந்து கொள்ள இயலாது. மகான்ாகிய கண்டராதித்தர் காலமாகும் தறுவாயில் பெரிய பிராட்டி அதை அவரிடம் கூறினார் என்பது எனக்குத் தெரியும். கண்டராதித்தர் என்னிடம் சொல்லத் தொடங்கினார். இரண்டு வார்த்தை சொல்வதற்குள் அவருடைய மூச்சு நின்று விட்டது......''

''மற்ற இருவரும் யார், ஐயா? ''

''மற்ற இருவரும் பேசத் தெரியாத ஊமைகள்; சேந்தன் அமுதனின் அன்னையும் பெரியன்னையுந்தான். இவர்களில் சேந்தன் அமுதனுடைய அன்னையிடமிருந்து நாம் ஒன்றும் தெரிந்து கொள்ள இயலாது. செம்பியன் மகாதேவியிடம் அவள் அளவிலாத பக்தி உள்ளவள். அந்தத் தேவி உயிரோடிருக்கும் வரையில் இவள் ஒன்றும் தெரிவிக்க மாட்டாள். ஆகையினால் தான் அவளுடைய தமக்கை மந்தாகினியை ஈழநாட்டிலிருந்து அழைத்து வருவதற்கு நான் பெரும் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தேன்....''

''ஆகா! அந்தக் கரையர் மகளின் பெயர் மந்தாகினியா? அவள் உயிரோடிருப்பது தங்களுக்கு எப்போது தெரிந்தது? ''

''தேவி! இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக அது எனக்குத் தெரிந்த விஷயந்தான்.''

''என்ன? என்ன? இருபத்தைந்து வருஷங்களாகத் தெரிந்துமா, என் தந்தையிடம் தாங்கள் சொல்லவில்லை? ஐயோ! அவள் இறந்துவிட்டாள் என்ற எண்ணத்தினால் என் தந்தை எத்தனை மனோவேதனைக்கு உள்ளானார் என்பதெல்லாம் தங்களுக்குத் தெரியாதா?''

''தெரியும், தாயே! தெரியும்.''

''தெரிந்துமா அவரிடம் உண்மையைச் சொல்லாதிருந்தீர்கள்? ''



அநிருத்தர் ஒரு நெடிய பெருமூச்சு விட்டார். அவர் உள்ளத்தில் ஒரு போராட்டம் நிகழ்ந்தது என்பதை அவருடைய முகம் எடுத்துக் காட்டியது. பின்னர் அவர் கூறினார்:—

''தேவி! இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நான் ஒரு குற்றம் செய்தேன். முதன் முதலாக அதை இப்போது தங்களிடந்தான் சொல்லுகிறேன். கரையர் மகளைத் தேடி வரும்படி தங்கள் தந்தை என்னை அனுப்பினார் அல்லவா? விரைவாகக் குதிரை மீது செல்லும் ஆட்களுடன் நானும் போனேன். கோடிக்கரை போய்ச் சேர்ந்தோம். அங்கே கொந்தளித்துக் கொண்டிருந்த கடலில் அவள் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து விழுந்து விட்டாள் என்பதை அறிந்தோம். அந்தப் பயங்கரக் காட்சியை நேரில் பார்த்தவர்கள் சொன்னார்கள். தியாகவிடங்கரே நடுங்கிய குரலில் நாக்குழறக் கூறினார். அதைத்தான் நானும் தஞ்சாவூருக்கு வந்து என் நண்பரிடம் தெரிவித்தேன்....''

''இதில் தங்கள் குற்றம் என்ன, ஐயா? '' என்றாள் குந்தவை.

''குற்றம் இதுதான்! கரையர் மகள் கடலில் விழுந்தாளே தவிர, அதிலே முழுகிச் சாகவில்லை. அத்தகைய கொந்தளித்த கடலில் படகு விட்டுக் கொண்டு வந்த வலைஞன் ஒருவன் அவளைக் கண்டெடுத்துப் படகில் ஏற்றிக் காப்பாற்றி விட்டான். கோடிக்கரைக்கு வெகு தூரத்துக்கு அப்பால் அவன் வந்து கரையேறினான். திரும்பி வரும் வழியில் நான் அந்தக் கரையேறும் படகைப் பார்த்தேன். அதில் இருந்த பெண் யார் என்பதையும் தெரிந்து கொண்டேன். அந்தப் படகுக்காரனிடம் நிறையப் பணம் கொடுத்து அவளைப் பத்திரமாக இலங்கைக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும்படியும் அங்கேயே இருக்கும்படியும் கூறினேன். அவனும் சம்மதித்துச் சென்றான். நான் திரும்பித் தஞ்சைக்கு வந்து கரையர் மகள் கடலில் விழுந்து மாண்டு விட்டதாகக் கூறினேன். தங்கள் தந்தைக்கு நன்மை செய்வதாக நினைத்துக் கொண்டு

தான் மனமறிந்து அத்தகைய குற்றத்தைச் செய்தேன். அந்தக் குற்றம் இத்தனை காலத்துக்குப் பிறகு இப்படி ஒரு விபரீதமான விளைவை உண்டாக்குமென்று எதிர்பார்க்கவில்லை....''



ளையபிராட்டி குந்தவை அப்போது குறுக்கிட்டு, ''ஐயா! தாங்கள் செய்தது குற்றமாயிருந்தாலும் என் தந்தைக்கு நன்மை செய்யும் எண்ணத்துடனேயே செய்தீர்கள். பிறகு, அக்கரையர் மகளைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டு வந்தீர்களா? '' என்று கேட்டாள்.

''ஏன்? அடிக்கடி கேள்விப்பட்டுத்தான் வந்தேன். இளவரசுப் பட்டம் சூட்டிக் கொண்டதும் சுந்தர சோழர் மதுரைப் போர் முனைக்குப் போனார். நான் காசி க்ஷேத்திரத்துக்குச் சென்றேன். சில ஆண்டுகள் அங்கேயே தங்கி வேதாகம சாஸ்திரங்கள் பயின்று விட்டுத் திரும்பி வந்தேன். அப்போது பழையாறையில் ஈசானபட்டரின் தந்தை அந்தக் கரையர் மகளோடு அந்தரங்கமாக உரையாடிக் கொண்டிருந்ததைக் கண்டு வியந்தேன். அவர் ஒரு அதிசயமான செய்தியைச் சொன்னார். அந்தக் கரையர் மகள் பெரிய பிராட்டியின் அரண்மனைத் தோட்டத்தில் வந்து சில நாள் தங்கியிருந்ததாகவும், இரட்டைக் குழந்தைகள் பெற்று அங்கேயே போட்டு விட்டு ஓடிப் போனதாகவும் கூறினார். எப்போதாவது நினைத்துக் கொண்டு குழந்தைகளைப் பார்ப்பதற்காக அவள் இரகசியமாக வருவதுண்டு என்றும் தெரிவித்தார். குழந்தைகள் என்ன ஆயின என்று கேட்டேன். அவர் சொல்ல மறுத்து விட்டார். அது செம்பியன் மாதேவிக்கு மட்டுமே தெரிந்த இரகசியம் என்றும் கூறினார். நானும் அதைப் பற்றி அதிகம் கிளறாமலிருப்பதுதான் நல்லது என்று சும்மா விட்டு விட்டேன். தேவி! அருள்மொழி குழந்தைப் பிராயத்தில் காவேரி நதியில் விழுந்து விட்ட போது, அவனைக் காவேரி அன்னை காப்பாற்றினாள் என்று எல்லாரும் சொல்லுவார்கள் அல்லவா? அப்படிக் காப்பாற்றியவள் உண்மையில் கரையர் மகள்தான் என்று என் மனத்தில் அச்சமயமே தோன்றியது.....''

## அருள்வாக்கு

மாணவன், வித்யார்த்தி, சிஷ்யன் என்றெல்லாம் நாம் சொல்லும் பையனுக்கு 'சாத்ரன்' என்று அக்காலத்தில் பேர் இருந்திருப்பதாகப் பாணினியின் வ்யாகரணத்திலிருந்து தெரிகிறது. 'சத்ரம்' என்றால் குடை என்று தெரிந்திருக்கலாம். ஒரு குடை ஒருத்தன் தலைக்கு மேலே கவிந்து கொண்டு அவனை வெய்யில் மழைகளிலிருந்து காப்பாற்றுகிற மாதிரி குரு என்பவரால் நன்றாக அரவணைக்கப்பட்டுக் கெடுதல்களிலிருந்து காப்பாற்றப்படுவதாலேயே சிஷ்யனுக்கு 'சாத்ரன்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இதிலிருந்து குருவுடைய உத்தமமான குணமும் அவருடைய அன்புப் பணியும் தெரிகின்றன. அதாவது கல்வி என்பது அறிவு ஸம்பந்தப்பட்டதாக மட்டும் இன்றைக்குப் போலில்லாமல் நல்ல குணத்தின் ஸம்பந்தமுள்ளதாகவும் இருந்தது என்பதற்காகச் சொல்கிறேன்.



வித்யாசாலைக்கு அப்போது 'சரணம்' என்ற பேர் இருந்ததாகவும் பாணினீயத்திலிருந்து தெரிகிறது. சரணம் என்றால் கால். பாதம், பதம் என்று காலைச் சொல்கிறோம். பரமபதம் என்று மிகவும் உயர்ந்த ஸ்தானத்தைச் சொல்லும் போதும் 'பதம்' என்ற வார்த்தை வருகிறது. கால் நம் உடம்பைத் தாங்கி நிற்கச் செய்வது போல நம் உயிரைத் தாங்கி நிலைத்து நிற்கும்படி செய்யும் பெரிய 'ஸப்போர்ட்'தான் பதம். சரணம் என்று இதே அர்த்தத்தில்தான் குருகுலத்துக்குப் பெயர் கொடுத்திருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

"தங்கள் உள்ளத்தில் தோன்றியது உண்மைதான், ஐயா! அருள்மொழி ஈழ நாட்டில் அந்த மாதரசியைப் பார்த்து விட்டு வந்து அவ்வாறுதான் சொன்னான். ஆனால் இந்த விந்தையைக் கேளுங்கள்! என் தந்தை என்ன எண்ணுகிறார் தெரியுமா? கடலில் விழுந்து இறந்த கரையர் மகள்தான் ஆவி வடிவத்தில் வந்து தம் மக்கள் மீது பழி வாங்குவதாக எண்ணுகிறார். நேற்றிரவு வெளியில் கடும் புயல் அடித்த போது என் தந்தையின் உள்ளப் புயலும் வேகத்தை அடைந்தது. இரவு முழுதும் அவர் தூங்கவே இல்லை. என்னையும் தூங்க விடவில்லை. பழைய கதைகளையெல்லாம் மறுபடி சொன்னார். 'கடலில் விழுந்து இறந்த அந்தப் பழிகாரிதான் இப்போது என் பேரில் பழி வாங்குகிறாள். அவள்தான் என் அருள்மொழியைக் கடலில் மூழ்க அடித்துக் கொன்று விட்டாள்! கரிகாலனையும் அவள் பழிவாங்காமல் விட மாட்டாள்!' என்று அடிக்கடி அலறினார். 'என் ஒரு மகனாவது உயிரோடிருக்கும் போது என்னைக் கொண்டு போக மாட்டாயா, யமனே!' என்று கதறினார். அவருக்கு எவ்வளவோ நான் சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை. அதன் பேரிலேதான் நாகைப்பட்டினம் புத்த விஹாரத்தில் அருள்மொழி வர்மன் பத்திரமாயிருப்பதைப் பற்றி அவரிடம் சொல்ல வேண்டி நேர்ந்தது...."

"அதற்குப் பிறகு சக்கரவர்த்தி சிறிது ஆறுதல் அடைந்தாரா?"

"அதுதான் இல்லை. அதன் பிறகு சித்தப்பிரமை இன்னும் அதிகமாகி விட்டது. முதலில் அச் செய்தியை அவர் நம்பவே இல்லை. ஆனால் நானே நேரில் பார்த்து விட்டு வந்தேன் என்று சொன்ன பிறகு நம்பினார். ஏன் அவனை அழைத்துக் கொண்டு வரவில்லை என்று கேட்டார். குளிர் சுரத்துக்குப் பிறகு பிரயாணத்துக்கு வேண்டிய உடல் பலம் வரவில்லை என்றும், விரைவில் அழைத்துக் கொண்டு வர ஏற்பாடு செய்வதாகவும் கூறினேன். ஆனால் அவனை இப்போது இங்கு அழைத்து வருவதால் இராஜ்யத்தில் ஏற்படக் கூடிய குழப்பத்தைப் பற்றியும் இலேசாகச் சொன்னேன். இதைக் கேட்டதும் அவருடைய மனப்போக்கு வேறு விதமாகத் திரும்பி விட்டது. 'இந்த இராஜ்யந்தான் என் பிள்ளைகளுக்கு யமனாக ஏற்பட்டிருக்கிறது. இராஜ்யம் அவர்களுக்கு இல்லையென்று தீர்ந்தால் என் புதல்வர்கள் உயிரோடு சுகமாயிருப்பார்கள். அதற்காகத்தான் அவர்களை இங்கு அழைத்து வர இவ்வளவு அவசரப்படுகிறேன்!' என்றார். திடீரென்று இன்னொரு பீதி அவர் மனத்தில் குடி கொண்டது. உக்கிரமான புயல் காற்றினால் நேற்றிரவு அரண்மனையெல்லாம் கிடுகிடுத்துப் போயிற்று. ஒரு தடவை பேரிடி இடித்து ஓய்ந்ததும் என் தந்தை வெறி கொண்டு விட்டார். 'மகளே! அருள்மொழியை இனி நான் பார்க்கப் போவதில்லை. கீழைக் கடலில் தோன்றும் புயற் காற்றுக்களையும் சுழிக் காற்றுக்களையும் பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும். இன்று அடிக்கும் புயலினால் கடற்கரையில் தென்னைமர உயரம் அலைகள் எழும்பும். உள்நாட்டில் வெகு தூரம் கடல் பொங்கி வந்து மூழ்க அடிக்கும். காவேரிப் பட்டினத்தை அன்றொரு நாள் கடல் கொண்டது போல் நாகைப்பட்டினத்தையும் கொண்டு போனாலும் போய் விடும். அதிலும் கடற்கரைக்கும் கால்வாய்க்கும் மத்தியில் உள்ள புத்த விஹாரம் ஒரு நாளும் தப்பிப் பிழைக்காது. அந்தப் பழிகாரி கரையர் மகள் கடலில் என் மகனைக் கொண்டு போக முடியவில்லை. அதற்குப் பதிலாகக் கரையிலேயே வந்து என் மகனைக் கொல்லப் போகிறாள்! நான் போய் இதோ அவளைத் தடுத்து என் மகனைக் காப்பாற்றப் போகிறேன்' என்று கதறிக் கொண்டு எழுந்திருக்க முயன்றார். அந்த முயற்சியில் தளர்ச்சியுற்றுப் படுக்கையில் விழுந்தார். ஐயா! அப்போது என் தந்தை விம்மி அழுத குரலைக் கேட்டால் கல்லும் மலையும் உருகி விடும்!" என்றாள் இளையபிராட்டி. அவளுடைய கண்களில் அப்போது தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

(தொடரும்)

# தடுமாற்றம்

உத்தமசோழன்

''எனக்கென்னமோ பயமா இருக்கு மாமா. கூடவோ, குறைச்சலோ இப்ப நீங்க செஞ்சுக்கிட்டிருக்கிற காய்கறி வியாபாரத்திலே கிடைக்கிறதை வச்சுக்கிட்டுப் பசியில்லாம சாப்பிட்டுக்கிட்டிருக்கோம். சின்னதா இருந்தாலும் சொந்தமா ஒரு கொட்டகை இருக்கு. நிம்மதியாப் படுத்துத் தூங்குகிறோம். இதை விட்டுட்டு நீங்க சொல்ற மாதிரி செய்ய ஆரம்பிச்சா, வம்பு தும்பிலே மாட்டிக்கிட்டு அவஸ்தைப்படணும்... நிம்மதியும் போயிடும்னு தோணுது...''

இப்படி கவலையோடு சொன்ன கமலத்தை, ''பைத்தியம்... பைத்தியம்!'' என்று பிரியமாய்க் கடிந்து கொண்ட சோமு, ''நானும் உன்னை மாதிரிதான் இதுவரைக்கும் பயந்துக்கிட்டிருந்தேன். ஆனா அந்தப் பயத்துக்குக் கொஞ்சம் கூட அர்த்தமில்லேன்னு இப்போதான் புரியுது'' என்றான்.

''எதை வச்சு அப்படிச் சொல்றீங்க?''

''வேற எதை வச்சு...? நானும் எத்தனை வருஷமா காய்கறி வியாபாரம் பண்ணிக்கிட்டிருக்கேன், என்ன மிஞ்சுது...? நீ சொல்ற மாதிரி வேணும்னா பசியில்லாம சாப்பிட்டுக்கிட்டு, பொசுக்குன்னு தூங்கிக்கிட்டிருக்கோம். அவ்வளவுதான். ஆனா

அந்தப் பக்கிரியோட பேச்சைக் கேட்டிருந்தா இந் நேரம் நம்ப வீட்லே எரியற இந்த சிம்னி விளக்குக்குப் பதிலா டியூப் லைட் எரிஞ்சுக்கிட்டிருக்கும். இந்தக் கூரைக் கொட்டகைக்குப் பதிலா ஒரு சின்ன மாடி வீடாவது இருக்கும். உன் கழுத்திலே தொங்குது பாரு வெறும் மஞ்சக் கயிறு, அதுக்குப் பதிலா பவுனு சங்கிலி தொங்கிக்கிட்டிருக்கும். நம்ப பசங்க ரெண்டும் சைக்கிள் ரிக்ஷாவிலே ஏறி, கான்வென்ட்டுக்குப் போய்க்கிட்டிருக்கும்.''

''போதும் போதும்.. நிறுத்துங்க. பித்தம் ரொம்பத்தான் தலைக்கேறியிருக்கு...!''

''எனக்கொண்ணும் பித்துப் பிடிக்கலை. நிஜத்தைத்தான் சொல்றேன். நம்ப மேலத் தெரு கோவிந்தன் பய இருக்கானே.. நாலைஞ்சு மாசத்துக்கு முன்னாடி அவன் நிலைமை எப்படி? ஒரு சிங்கிள் டீக்கு லாட்டரி. இப்பப் பாரு. ஆளு அப்படியே உதிக்கப் போயி, ஐம்பதும் நூறும் சர்வ சாதாரணமா கையிலே புரளுது. அவன் பெண்ஜாதி கழுத்திலே என்னென்னமோ மின்னுது. எல்லாம் எப்படி வந்துச்சி? அந்த பக்கிரியோட ஏற்பாடுதான். 'சாராயம் விக்கிறதிலே என்ன கேவலம்? காப்பி, டீ விக்கிறது மாதிரிதானே அதுவும்'னு அவன் சொன்னதை அப்படியே கேட்டதாலே இன்னைக்குக் கோவிந்தன் பய கொழிக்கிறான்!''

''ஹூம்... அப்படியா?'' ஆச்சரியக் கேள்வி கேட்ட கமலத்தை மேலும் ஆச்சரியப்பட வைத்தான் சோமு.

''அட அவனை விடு. கோட்டகத்து முருகனைப் பத்தி உனக்குத் தெரியாது? பத்து பைசாவைப் பத்து நாளைக்கு ஒரு தடவை கூட கண்ணால பார்த்திருக்க மாட்டான். அவனுக்கு வந்த வாழ்வைப் பாரேன். இதுவும் பக்கிரியோட மகிமைதான். கொஞ்சம் சரக்கைக் கடனாகக் கொடுத்து வியாபாரத்தைச் சொல்லிக் கொடுத்தான். இப்ப என்னடான்னா, புறாக் கூடு மாதிரி இருந்த அவனோட குடிசை பெரிய கொட்டகை வீடாகி, சிமெண்ட் பூசி, கரண்ட் போட்டு, டேப் பாடிக்கிட்டிருக்கு.''

''நெசமாலுமா? நம்பவே முடியலையே!'' கமலத்தின் கண்ணிமைகள் வியப்பால் படபடத்தன.

''இதுலே நம்பாம இருக்கிறதுக்கு என்ன இருக்கு? நடக்கிறதைத்தானே சொல்றேன். இதப் பாரு நீ மட்டும் சரின்னு சொன்னா போதும். காலையிலேயே பக்கிரிகிட்டச் சொல்லி வாடிக்கையா சரக்கு எடுத்துக்கலாம். நம்ப கொட்டகைக்குப் பின்னாடி கிடக்கிற குப்பைக் குழிகிட்ட கொஞ்சம் சுத்தம் பண்ணிட்டு, நாலைஞ்சு தென்னங்கீத்தை வச்சு மறைப்புக் கட்டிட்டு வியாபாரத்தை ஆரம்பிச்சிடலாம். சாயங்காலம் ஆறு மணிக்கு ஆரம்பிச்சோம்னா செகண்ட் ஷோ விடற வரைக்கும் ஓடும். ஒரு நாளைக்கு நூறு நூத்தம்பது கிடைக்கும். போகப் போகக் கூடிக்கிட்டே போகும். என்ன சொல்றே....?'' ஆர்வமாய் அவளையே பார்த்தான்.

''நீ சொல்றதைக் கேக்க ஆசையாத்தான் இருக்கு. ஆனா போலீஸ் புடிச்சுக்கிட்டா?''

''போலீஸ் புடிப்பாங்கதான். ரௌடிப் பசங்களோட தொந்தரவும் இருக்கும். ஒரு சௌகர்யம்னு வரப்ப இப்படி சில கஷ்டங்களும் வரத்தானே செய்யும். ஆனா இதையெல்லாம் எப்படி சமாளிக்கிறதுன்னு பக்கிரியண்ணே சொல்லிக் கொடுத்திருக்கான். அதைப்பத்தியெல்லாம் நீ கவலைப் படாதே! நான் பாத்துக்கிறேன்.''








# இந்த எல்லா நன்மைகளையும் உங்களுக்கு அளித்திட ஒரே ஒரு சேமிப்புத் திட்டத்தினால் மட்டுமே முடியும்.




## யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம்.

ரூ.300 முதல் ரூ.4000 வரை செலுத்தப்படும் வருடாந்திர தொகைகளுக்கு யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம் (யூஎல்ஐபி.) பலவித நன்மைகளை அளிக்கிறது.

வருமானவரிச் சட்டம் 80சி பிரிவின் கீழ் வரிவிலக்கு; மேலும் உயர்ந்த பட்ச வருமானம்; ஏனெனில் நீங்கள் செலுத்தும் தொகையின் பெரும் பங்கு யூனிட்டுகளில் முதலீடு செய்யப்படுகிறது. இதனால் உங்களுக்கு அதிக லாப பங்கு (டிவிடெண்டு) கிடைக்கிறது. (இவ்வருட டிவிடெண்ட் 13.50%)

ஆயுள் காப்பு (அதிக பட்சமாக ரூ.40000 வரையில்) மற்றும் ரூ.15000 வரையிலான இலவச விபத்துக் காப்பு.

இவைதவிர திட்ட முதிர்வில் முதிர்வு போனஸ் வழங்கப்படுகிறது.

முதிர்வு போனஸ் உடன் கூடிய சேமிப்பின் தோராயமான வளர்ச்சி

| திட்டத்தில் சேருகையில் வயது | இலக்குத் தொகை 10 வருட திட்டத்தில் ரூ.40000/- | இலக்குத் தொகை 15 வருட திட்டத்தில் ரூ.39000/- |
|---|---|---|
| 25 வருடம் | ரூ.74850/45 | ரூ.1,00,956.89 |
| 35 வருடம் | ரூ.74259/41 | ரூ. 99,302.72 |
| 45 வருடம் | ரூ.72338/47 | ரூ. 94,310.22 |
| 50 வருடம் | ரூ.70447/09 | — |

18 வயதுக்கு மேல் 50 வயதுக்கு உட்பட்ட எவரும் இத் திட்டத்தில் சேரலாம்.

எனவே, இன்றே சரியான முடிவு செய்யுங்கள். யூனிட் டிரஸ்டின் ஏஜெண்டுகள், முக்கிய பிரதிநிதிகள் அல்லது ஸ்பென்சர் அண்டு கம்பெனி அல்லது கனரா வங்கியின் கிளைகளை தொடர்பு கொள்ளுங்கள்.



## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம் பம்பாய் 400 020.

மண்டல அலுவலகம்,
45, செகண்ட் லைன் பீச், சென்னை 600 001.
போன்: 580538 / 587433.

• ஹைதராபாத் கிளை: 203/204 மொகல் கோர்ட் காம்பலக்ஸ், இரண்டாவது மாடி, பஷீர் பாத், ஹைதிராபாத் 500 001. போன் 240030 • விஜயவாடா கிளை: செல்லப்பள்ளி மாளிகை கவர்னர்பேட், விஜயவாடா 520 002. போன்: 63964 • பெங்களூர் கிளை: முதல் மாடி, சேம்பர் ஆப் காமர்ஸ் கட்டிடம், 3கே.ஜி.ரோடு பெங்களூர் 560 009. போன்: 28739 • திருச்சூர் கிளை: 12/817 தெக்கமாடம் சாலை, திருச்சூர் 680 001. போன்: 24690 • கொச்சி கிளை: மூன்றாம் மாடி, எல்.ஐ.சி. கட்டிடம், எம்.ஜி.ரோடு, எர்ணாகுளம், கொச்சி 682 011.

தமிழ்நாட்டின் எங்கள் முக்கிய பிரதிநிதிகள்
• கோயமுத்தூர், எ.தனபால், போன்: 34776. • மதுரை, எம். இராமமூர்த்தி, போன்: 36661/43179.
• தஞ்சாவூர், கே. முத்துசாமி, போன்: 20374. • சேலம், என்.கே. இங்கர்சால், போன்: 51520.
• திருச்சி, எம். இராமலிங்கம், போன்: 41252.
• வேலூர், பி. நாராயணன், போன்: 21573.
• கடலூர், எஸ். பாலகிருஷ்ணன், போன்: 546/46.
• நாகர்கோவில், எஸ். சுபாஸ் சந்திர போஸ், போன்: 4449. • குன்னூர், எம். மாதவன் நம்பியார், போன்: 6253/7037.




**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்!**

Sista's-UTI.1032.88 TM B

மேற்கொண்டு என்ன சொல்வது என்று தெரியாமல் அவள் விழித்துக் கொண்டிருந்தாள்.

"அப்ப சரி! நாளைக்கே நம்ப வியாபாரத்தை ஆரம்பிச்சிட வேண்டியதுதான். காலையிலே நாலு மணிக்கெல்லாம் பக்கிரியைப் பாக்கப் போகணும். எழுப்பி விட்டுடு." 'இன்றோடு நம் தரித்திரம் தொலைந்தது' என்ற நிம்மதிப் பெருமூச்சோடு பாயில் மல்லாந்தான் சோமு. சற்றுத் தாமதித்து, உட்கார்ந்திருந்த கமலத்தை தன் மீது சாய்த்துக் கொண்டான். அவள் கன்னங்களை வருடியவன் நிறுத்தி விட்டுச் சொன்னான்.

"பாத்தியா.. உன் கன்னம் எப்படி காய்ஞ்சு போய்க் கிடக்கு! இப்படியிருக்கப்பவே பாக்க குளுமையா இருக்கே. இன்னும் நல்ல சாப்பாடு, துணிமணி கிடைச்சா... கிடைச்சா என்ன? கிடைக்கத்தானே போகுது. எண்ணி இன்னும் முப்பதே நாள். ஆள் எப்படி ஆகப் போறே பாரேன். பாக்கிறவனெல்லாம் மயக்கம் போட்டு விழப் போறான்!"

"ச்சீய்... பேச்சைப் பாரு... கிறுக்கு மாதிரி." அவளின் பொய்க் கோபத்தைச் சந்தோஷமாய் ரசித்தான் அவன்.

**சொ**ன்னபடியே மறுநாள் காலை மூன்றரை மணிக்கே, கமலம் எழுப்பாமலே எழுந்து கொண்டான் சோமு. தனது சைக்கிளை எடுத்துக் கொண்டு பக்கிரியைத் தேடிக் கொண்டு போனான்.

பக்கிரி ஒரு பத்து லிட்டர் கறுப்பு பிளாஸ்டிக் கேன் நிறைய சாராயத்தை ஊற்றிக் கொடுத்தான் — தனக்கு மேலும் ஒரு வாடிக்கையாளன் கிடைத்து விட்ட மகிழ்ச்சியுடன்.

"தைரியமா செய் சோமு. இந்தக் காலத்திலே நேர்மையா தொழில் செஞ்சு எவனும் முன்னுக்கு வந்திட முடியாது. வியாபாரத்தை ஆரம்பிச்சோன்னே கண்டவனும் வந்து அப்படி இப்படின்னு மிரட்டுவானுங்க. பயப்படாதே! காசுக்குத்தான். அப்புறம் எல்லாரும் சரியாப் போயிடுவானுங்க. போகப் போகப் பாரேன். 'லெட்சுமி' எந்த நேரமும் உங்கையிலே விளையாடிக்கிட்டே இருப்பா. சந்தோஷமா போயிட்டு வா!" என்று உபதேசமும் வாழ்த்துமாய் அனுப்பி வைத்தான்.

இதுவரை காய்கறிக் கூடையை மட்டுமே ஏற்றிப் பழக்கப்பட்ட அவனது சைக்கிள், முதன் முதலாகச் சாராயக் கேனைச் சுமந்து கொண்டது. தன் எதிர்கால வியாபாரத் திட்டங்களோடு உற்சாகமாகச் சைக்கிளை மிதித்துக் கொண்டிருந்தான் சோமு.

**ஏ**ற்கெனவே திட்டமிட்டபடி தன் வீட்டுக் கொல்லைப்புறத்தில் குப்பைக் குழி ஓரமாகக் கொஞ்சம் சுத்தம் செய்து கொண்டு, ஐந்தாறு தென்னங் கீற்றுகளை வைத்து ஒரு மறைப்பு கட்டினான். 'பார் ரூம்' தயாராகி விட்டது.

அன்று மாலை ஆறு மணிக்கு மேல் சரக்குக் கேனை எடுத்துப் போய் வீட்டுக்குள்ளிருக்கும் 'வீட்டுத் தெய்வத்'திற்கு முன் வைத்தான். அவனது வீட்டில் பலகார பட்சணங்கள் செய்தால் வீட்டுத் தெய்வத்திற்கு முன் வைத்துத் தண்ணீர் தெளித்து, பின்புதான் உண்பது வழக்கம்.

வீட்டுத் தெய்வம் என்றால் அவனது முன்னோர்கள் ஆவியா, அல்லது பெரியாச்சியா என்பதில் இதுவரை அவனுக்குத் தெளிவில்லை. இருந்தாலும் 'சாமி' கும்பிட அது பயன்பட்டது. அடுக்களைக்குப் பக்கத்தில், சாணம் மெழுகிய கட்டைச் சுவரில் நான்கைந்து இடங்களில் பட்டை பட்டையாய் விபூதி பூசப்பட்டுக் குங்குமப் பொட்டு வைத்திருக்கும். அதுதான் அந்த வீட்டுத் தெய்வத்தின் இருப்பிடம்.

இப்போதும் அதற்கு முன் சாராயக் கேனை வைத்துச் சாம்பிராணி போட்டுத் தண்ணீர் தெளித்து 'என் கஷ்டமெல்லாம் இன்னியோட தொலையணும்' என்று கீழே விழுந்து வணங்கினான்.

பிறகு கொல்லைப்புறம் ஏற்பாடு செய்திருந்த மறைப்புக்குக் கொண்டு போனான். ஒரு மண்ணெண்ணெய் சிம்னி விளக்கை ஏற்றி, காற்றில் அணையாமல் இருக்க ஒரு கூடையை மறைப்புக் கொடுத்தான். அதன் பின் ஏற்கெனவே செய்தி தெரிந்து, வந்து காத்திருந்த சில வாடிக்கையாளர்களுக்குப் பயபக்தியுடன் ஊற்றிக் கொடுத்தான்.

இப்படியாக அவனது வியாபாரம் கோலாகலமாக ஆரம்பித்தது.

**சோ**முவின் புதிய வியாபாரஸ்தலம் அதன் வாடிக்கையாளர்களால் ஒருவர் மற்றவரிடம் ரகசியமாகச் சொல்லப்பட்டே, ரேடியோ, டி.வி. என்று எந்த விளம்பர சாதனத்தின் உதவியுமில்லாமலே, மிக விரைவில் பிரபலமாகி, ஜெகஜோதியாகச் சூடுபிடிக்க ஆரம்பித்து விட்டது.

---

"உங்க ஆபீஸ்ல எல்லோரும் நேரத்தோடு வர ஒரு ஏற்பாடு பண்ணிட்டீங்களாமே! எப்படி?"

"வேறொண்ணுமில்லே, எவ்வளவு நேரம் லேட்டா வர்றாங்களோ அவ்வளவு நேரத் தூக்கம் 'கட்'டுன்னு கண்டிஷன் போட்டேன், அவ்வளவுதான்!"

— ஆர். உமாபதி.



அவன் தனது கொள்முதல் அளவைப் பத்து லிட்டரிலிருந்து படிப்படியாக நாற்பது லிட்டராக உயர்த்தி விட்டான். அதற்கேற்ப லாபமும் ஏறிக் கொண்டேயிருந்தது.

இடையில் இரண்டு மூன்று முறை அவனைப் போலீஸ் பிடித்துச் சென்று, ஜாமீனில் விடுவித்தது. விளைவு? அவனிடம் கொஞ்ச நஞ்சமிருந்த பயமும் பறந்து போனது.

சோமுவின் வார்த்தைப்படியே, ஒரு மாதத்திற்குள்ளாகவே, கமலம் பூரித்து, பளபளவென்று மின்ன ஆரம்பித்து விட்டாள்.

இப்போதெல்லாம் அவள் வீட்டில் சமைப்பதே இல்லை. சமைப்பதற்கு ஏது நேரம் அவளுக்கு? இரவு முழுக்கக் கஜகஜ வென்று வந்து போகும் வாடிக்கையாளர்களைக் கவனிப்பதற்கே நேரம் போதவில்லை. பின் எப்போது தூங்குவது? பகலில்தானே அது முடியும்!

சாப்பிட நசிமா ஓட்டல் பிரியாணியும், முட்டை புரோட்டாவும் சிக்கன் ரோஸ்ட்டுமாகக் காசு பஞ்சமில்லாமல் செலவழிந்து கொண்டிருந்தது.

**வ**ழக்கம் போல் அன்றும் விடியற் காலை மூன்று மணிக்கு எழுந்து கொண்ட சோமு, சரக்கு எடுப்பதற்காகச் சைக்கிளை எடுத்து வெளியே வைத்தான். வழக்கத்திற்கு மாறாகச் சடக்கென்று படுக்கையில் எழுந்து உட்கார்ந்த கமலம் "எங்கே கிளம்பிட்டே மாமா? சரக்கு எடுக்கத்தானே? ஒரு கருமாந்திரமும் வேண்டாம். வந்து படு!" என்றாள்.

அவன் அதிர்ச்சி அடைந்தான்.

"என்ன கமலம்... என்ன ஆச்சு உனக்கு? ஏன் அப்படிச் சொல்றே!"

"வேற எப்படிச் சொல்லணுங்கிறே? எப்பப் பார்த்தாலும் சரக்கு எடுக்கறதுக்குன்னும், கோர்ட்டுக்கு, போலீஸுக்குன்னும் நீ வெளியே சுத்தப் போயிடறே. நானில்லே தனியா மாட்டிக்கிட்டு வியாபாரத்தைப் பாக்கிறேன்."

"அதனாலென்ன?"

"என்னவா? நேத்து ராத்திரி என்ன நடந்துச்சுன்னு தெரியுமா உனக்கு? அந்தக் கேடி ரங்கன் பயல் இருக்கானே அவன் என்ன சொன்னான் தெரியுமா? 'கமலம்! உங் கையாலே பச்சைத் தண்ணியைக் கொடுத்தாக் கூட போதை வருது... அட அவ்வளவு ஏன்... உன்னைப் பார்த்ததுமே கப்புன்னு உடம்புக்குள்ளே 'கிக்' ஏறுது புள்ளே!' அப்படீன்னு ஹி..ஹி...ன்னு அசிங்கமா சிரிக்கிறான். எனக்கு நாக்கைப் பிடுங்கிக்கலாம் போலிருந்திச்சு."

அவனுக்குச் சுருக்கென்றது. நொடியில் ஆத்திரப்பட்டுப் போனான். அந்த ஆத்திரம் செயல் வடிவம் கொள்ள, விடுவிடென்று குப்பைக் குழி பக்கம் நடந்து போனான். ஆவேசத்துடன் ஊறலைக் கீற்றுகளைப் பிய்த்தெறிந்தான்.

# இன்று இறப்பு விழா

18

ராஜேஷ்குமார்

அலமாரிச் சுவரில் பொருத்தப்பட்டிருந்த அந்த சிமெண்ட் பலகைகள் உட்பக்கமாய் நகர, விவேக் உதட்டைக் குவித்து விசிலடித்தான். ''பார்றா.. இந்த அநியாயத்தை...! தமிழ் சினிமாலே வர்ற மாதிரி இருக்கு.''

உள்ளே பார்த்தான்.

சின்னதாய் ஒரு வயர்லெஸ் கண்ட்ரோல் யூனிட். மைக்ரோ போன் மைக்ரோ ரிஸீவர் இரண்டுமே கொக்கிகளில் தொங்கின. இன்ஸ்பெக்டர் கிஷோரும், தயாபாயும் பிரமிப்பாய் வந்து இரண்டு பக்கங்களிலும் நின்றார்கள்.

விவேக் மைக்ரோ ரிஸீவரை எடுத்துக் காதில் பொருத்திக் கொண்டு, போனில் குரல் கொடுத்தான்.

''நான் பகதூர்..''

''........'' — மௌனம்.

''நான் பகதூர்....''

மீண்டும் விவேக் கத்த — மறுமுனையில் குரல் பிசிறடித்த மாதிரி வந்தது. ''விவேக்! நீ எங்களை நெருங்குவது உனக்கு நல்லதில்லை...''

''பேசற அண்ணன் யார்ன்னு தெரிஞ்சுக்கலாமா?''

''விவேக்! நீ எங்களோடு விளையாடாதே?''

''எனக்கு எந்த விளையாட்டும் தெரியாது... ப்ரதர்... திருடன் போலீஸ் விளையாட்டைத் தவிர....''

''உனக்குக் கெட்ட காலம் ஆரம்பமாகுது!''

''அட! நீ ஜோசியம் கூடப் பார்ப்பியா? ப்ரதர்க்கு பம்பாய்ல எந்த மரத்தடியில ஜோஸ்ய உத்யோகம்...''

''டேய்ய்....''

''இவ்வளவு 'ய்ய்' போட்டுக் கத்தணுமா...? கடைவாய்ப் பல் சீக்கிரமே ஆட்டம் கண்டிடும்...''

''விவேக்! உனக்கு லாஸ்ட் வார்னிங்!''

''ஏன் அதுக்கப்புறம் வார்னிங் குடுக்க நீ உயிரோடு இருக்க மாட்டியா...?''

''ஸ்கௌண்ட்ரல்!''

''இவ்வளவு செலவு பண்ணி வயர்லெஸ் யூனிட் ஃபிக்ஸ் பண்ணினது இப்படி கெட்ட வார்த்தை பேசத்தானா...?''

''விவேக்! எரிச்சலைக் கிளப்பாதே! எங்க வழியை விட்டுத் தள்ளி நில்லு...''

''நீ இவ்வளவு மரியாதையா கேக்கும் போது நான் பிடிவாதம் பிடிக்கிறது சரியில்லை. எவ்வளவு அடி தள்ளி நிக்கணும்? ரெண்டடி போதுமா?''

''யூ...யூ...யூ....யூ...யூ...''

''அதுக்கு மேல இங்கிலீஷ் லெட்டர்ஸ் என்னான்னு தெரியலையா? சொல்றேன் கேட்டுக்கோ. யூ.. வி.. டபிள்யூ.. எக்ஸ்.. ஒய்.... இஸட்...''

''ராஸ்கல்!''

''நோ.. நோ.. 'இஸட்'தான் கடைசி. அதுக்கப்புறம் 'ராஸ்கல்' கிடையாது. நீ 'எல்.கே.ஜி.'யே படிக்கலை போலிருக்கே...?''

''விவேக்! பி. ஸீரியஸ்!''

''சரி... நானும் ஸீரியஸா சொல்றேன். அரசாங்கத்தைப் பணிய வைக்கிறதுக்காக ஒலிம்பிக் வீரர்களைத் தீர்த்துக்கட்ட நினைக்கிறது மகா அராஜகம். செஞ்ச கொலைகளுக்காகப் பக்கத்து போலீஸ் ஸ்டேஷன்ல போய்ச் சரணடையறது மகா உத்தமம்.''

''சரணடையப் போறது நாங்க இல்லை. இந்த அரசாங்கம்தான். பார்லிமெண்ட்டைக் கலைச்சே ஆகணும்...! ஒலிம்பிக்கை பாய்காட் பண்ணியே ஆகணும். நாங்க கொடுத்த எச்சரிக்கையை மீறி யார் ஒலிம்பிக்ல கலந்துக்கப் புறப்பட்டாலும் சரி.. புறப்படறதுக்கு முந்தி இந்த மண்ணுல பிணமாக வேண்டியதுதான்.''

''வசனம் நல்லா பேசறே? சினிமா நிறைய பார்ப்பியா?''

''உனக்கு நிறைய துணிச்சல்.''

''தாங்க்ஸ்! சர்ட்டிபிகேட்டை வீட்ல மாட்டிக்கிறேன்'' — விவேக் சொல்ல விட்டுச் சிரிக்க வயர்லெஸ் மறுமுனையில் அணைந்து போயிற்று.

விவேக் மைக்ரோ ரிஸீவரையும் போனையும் கொக்கியில் மாட்டி விட்டு, வியர்த்த முகமாய் நின்றிருந்த தயாபாயிடம் திரும்பினான். வயர்லெஸ் யூனிட்டைக் காட்டிக் கேட்டான்.

''இதுக்கு என்ன சொல்றீங்க தயாபாய்? உங்க சன் பகதூர் இந்தியக் கழுகுகளோடு தொடர்பு வெச்சுக்க ஒரு வயர்லெஸ் யூனிட்டையே இன்ஸ்டால் பண்ணியிருக்கான்...''

''எ...எ...எனக்கு எ... எதுவும் தெ.. தெரியாது...''

''ரெண்டு பேரும் ஒரே வீட்ல இருந்திருக்



ஸீங்க? அதெப்படி... இந்த சட்ட விரோதக் காரியம் உங்க கண்ணுல படாமே போகும்..?''

''பகவான் கி கஸம்.. எனக்கு எதுவும் தெரியாது ஸார்.''

''மிஸ்டர் கிஷோர்!''

''ஸார்...''

''இந்த வீட்டைப் பூட்டி சீல் வையுங்க. நாம் சீஸ் பண்ணின டயரியையும் 'சாவ்தான்' மாகஸின் காப்பிகளையும் மாத்திரம் ஆபீஸுக்குக் கொண்டு வந்துடுங்க...''

''எஸ்... ஸார்.''

மறுநாள் காலை எட்டு மணி. போலீஸ் ஹெட்குவார்ட்டர்ஸ். கமிஷனர் ஹில்லுக்கு முன்பாக உட்கார்ந்திருந்தான் விவேக். மேஜையின் மேல் டயரியும், அந்த 'சாவ்தான்' புத்தகக் கட்டுகளும் கிடந்தன.

''ஸார்... நேத்து ராத்திரி நடந்த சம்பவங்கள் வேகமானவை; ஆச்சர்யமானவை. கான்ஸ்டபிள் பகதூர் ஓர் இந்தியக் கழுகு. இதே மாதிரியான கழுகுகள் போலீஸின் எல்லா மட்டங்களிலும் இருக்கக்கூடும் என்பது என்னுடைய சந்தேகம். இந்தக் கேஸ் சம்பந்தமான விவகாரங்களில் இனிமேல் நீங்களும் நானும் மட்டுமே கலந்து பேசிக் கொள்வது உசிதம்.''

''இந்தச் சந்தேகம் எனக்கு ஏற்கெனவே உண்டு மிஸ்டர் விவேக். இந்த போலீஸ் கோட்டையிலும் உண்மை கசிகிற சில நுண்ணிய துவாரங்கள் உண்டு. அந்த துவாரங்களை அடைக்காமல் நாம் கேஸைக் கையாண்டால் முடிவுகள் நமக்குச் சாதகமாக இருக்காது....

''இன்றைக்கு ராத்திரி எட்டு மணிக்கு.. வீரர்களை லண்டனுக்குக் கொண்டு செல்லும் நம் திட்டம் ஆரம்பமாகிறது. மினிஸ்டர் காமோத் ராணுவ விமானத்திற்கும், அந்த விமானம் துபாய் ஏர்போர்ட்டில் இறங்குவதற்கும் அனுமதி வாங்கி விட்டார். இனி வீரர்களைச் சந்தடியில்லாமல் லண்டனுக்குக் கொண்டு போவது நம் பொறுப்பு. முதல் சுற்றில் புறப்பட்டுப் போகவிருக்கும் அர்ஜுன் கிருஷ்ணாவும், சுஷ்மா பட்டேலும் நிரம்பவும் தைரியமாகவே இருக்கிறார்கள். இவர்கள் இருவரும் துபாய் ஏர்போர்ட்

இந்தியத் தொழில் துறையின் முதுகெலும்பு போன்ற விவசாயத்தின் பல்வேறு பிரிவுகளைப் பற்றிய அதிசயமான, அதி ரசமான தகவல்கள்.

## * வனவளம்

மரங்களைப் பாதுகாக்க சிப்கோ இயக்கம் நடத்திய சுந்தர்லால் பகுகுணாவின் கட்டுரை முதல் ஜவ்வாது மலையில் சந்தன மரங்கள் வளர்ச்சி, சந்தன எண்ணெய்த் தயாரிப்பு வரை பல்வேறு விஷயங்கள்.

## * ரஸாயன உரங்கள், பூச்சி கொல்லிகள்

ரசாயன உரத் தயாரிப்பு ஆலைக்கு நேரடி விசிட் முதல் பூச்சி கொல்லி மருந்துகள் அதிகம் பயன்படுத்துவதால் மனித ஆரோக்கியத்துக்கு ஏற்படும் பாதிப்பு வரை ஓர் அலசல்.

## * மலைத் தோட்டங்கள்; பழத் தோட்டங்கள்

பணத்தை அள்ளித் தரும் பழத் தோட்டங்கள் முதல் தலைவர்களுக்கு மாலை அணிவிக்க உதவும் ரோஜாத் தோட்டங்கள் வரை! மலைத் தோட்டங்கள், கரும்புத் தோட்டங்கள் முதலியன.

## * விவசாயத் தொடர்பான பொறியியல் துறை

பல ரக பம்ப் செட்கள் தயாரிப்பு, டிராக்டர்கள் தயாரிப்பு பற்றிய படப்பிடிப்பு தவிர, விவசாயம் இயந்திரமயமாவதால் வேலை வாய்ப்புக்கள் பாதிக்கப்படுமா என்பது பற்றிய ஒரு காரசார விவாதம்!

## * விளைச்சலைப் பயன்படுத்தும் தொழில்கள்

கோகோ பயிரிலிருந்து சாக்லேட், கரும்புச் சக்கையிலிருந்து காகிதம், யூகலிப்டஸ் மரப்பட்டையிலிருந்து ரேயான் இழை... இன்னும் என்னென்னவோ வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களின் உற்பத்தி விவசாயத்தையல்லவா நம்பியிருக்கின்றது! சர்க்கரை ஆலை முதல் ரொட்டி — பிஸ்கட் தொழிலகங்கள் வரை ஒரு சுற்றுலா!

## * விவசாயத் தொழில் நுணுக்கம், நிதி உதவி விநியோகம், விற்பனை.

வீரிய விதை என்றால் என்ன? மாடுகளை இன்ஷ்யூர் செய்வது எப்படி? காவிரியில் கிடைக்கும் குறைந்தபட்ச நீரைக் கொண்டு அதிகபட்ச விளைச்சல் காண்பது எவ்வாறு? லோன்மேளாவினால் யாருக்குப்



போய்ச் சேர்ந்து லண்டனைத் தொட்டு விட்டால் மற்ற விளையாட்டு வீரர்களுக்கும் தைரியம் வந்து விடும்...''

''மிஸ்டர் விவேக்.''

''ஸார்..''

''இந்தத் திட்டம் வெற்றிகரமாய் இருக்குமா?''

''திடீரென்று எதற்காக இந்தச் சந்தேகம் ஸார்...?''

''உங்களுடைய பிரவேசத்தினால் இந்தியக் கழுகுகள் ஏராளமான ஆவேசத்தோடு இருக்கிறார்கள்.''

ஆவேசம், ஆத்திரம், கண்களை மறைக்கும் ஸார். எதிரியை வீழ்த்த அவனுக்கு ஆத்திரமூட்டுவதும் ஒரு வகை உபாயம்.''

''கான்ஸ்டபிள் பகதூரின் அப்பா தயாபாயை நாம் விசாரிக்கிற விதத்தில் விசாரித்தால் இந்தியக் கழுகுகளைப் பற்றி ஏதேனும் உபயோகமான தகவல் கிடைக்கலாம் விவேக்.''

''நோ.. யூஸ் ஸார். ஹி ஈஸ் ஹார்ம்லெஸ். அவருடைய பேச்சும் அதிர்ச்சியும் நிஜம். அவருக்குத் தெரியாமலேயே தன் தேச விரோதக் காரியங்களைக் கவனிச்சிருக்கான் பகதூர். அவருக்குப் படிக்கத் தெரியாததினாலே இந்த 'சாவ்தான்' பத்திரிகைகளையும் படிக்க வாய்ப்பில்லாமே போயிருக்கு...''

ஹில் ஒரு பத்திரிகைக் கட்டை எடுத்து, அதன் மேல் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டு, சுற்றியிருந்த பழைய நியூஸ் பேப்பரை உருவி வீசிய பின் ஒரு புத்தகத்தை எடுத்தார். பிரித்தார். இந்தியில் கவிதை வரிகள் ஓடியிருந்தன.

நண்பா!
அணிவகுப்பு ஆரம்பமாகட்டும்.
நம் புரட்சி — பீரங்கிக் குண்டுகளாக —
துப்பாக்கித் தோட்டாக்களாக —
மாறா விட்டாலும் —
குண்டூசி முனைகளாக மாறி —
இந்த தேசத்தை உறுத்திப் பார்க்கட்டும்.
நெருப்பு உன் ரத்த
நாளங்களில் ஊர்வலம் போகட்டும்.
நரம்புகள் —
கொடிக் கம்பங்களாக உயர்ந்து நிற்கட்டும்.

ஹில் — அந்தப் புத்தகத்தை வைத்து விட்டு மற்றொரு கட்டைப் பிரித்தார். கட்டின் மேல் கட்டியிருந்த பழைய நியூஸ் பேப்பர் தாளை உருவும் போது விவேக்கின் பார்வை கூர்மையாயிற்று.

''ஸார்... ஒரு நிமிஷம்..''

ஹில் கட்டைப் பிரிக்காமல் நிமிர்ந்தார் — ''எஸ்?''

''இந்தக் கட்டைச் சுற்றியிருக்கிற நியூஸ் பேப்பரைக் கிழிக்காமே எடுங்க.. ஸார்... ப்ளீஸ்...''

ஹில் கட்டின் மேல் சுற்றியிருந்த பேப்பர் கிழிபடாமல் எடுத்து விவேக்கிடம் நீட்டினார். ''எனிதிங் இம்பார்ட்டென்ட்?''

''ஸார்... இந்தப் பேப்பரைப் பார்த்தீங்

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publications : Madras
2. Periodicity of Publication : Weekly
3. Name of Printer : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony,
   Anna Nagar, Madras - 600 040
4. Name of Publisher : V. Vaidyanathan
   Nationality : Indian
   Address : 6-A, Warren Road,
   Mylapore, Madras - 600 004
5. Name of Editor : K. Rajendran
   Nationality : Indian
   Address : 1, Fifth Street, Lake Area,
   Nungambakkam,
   Madras - 600 034
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital : Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras - 600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Vaidyanathan
1.3.1989 Publisher

களா?''

ஹில் பார்த்தார்.

**THUNDER**
**(FOR PRIVATE CIRCULATION ONLY)**

''ஏதோ தனிச் சுற்றுப் பத்திரிகை..''

''கரெக்ட்! சந்தாதாரர்களுக்கு மட்டும் நேரிலோ, தபாலிலோ அனுப்பப்படுகிற பத்திரிகை. இந்தப் பத்திரிகையைப் படிக்கிற யாரோதான் இந்த 'சாவ்தான்' புத்தகங்களைக் கட்டி அனுப்பியிருக்கணும்.''

ஹில்லின் கண்களில் கொஞ்சமாய்ச் சந்தோஷம் ஒட்டிக் கொண்டது. ''மே...பி.. மிஸ்டர் விவேக்! இந்த 'தண்டர்' பத்திரிகையோட விலாசம் என்னான்னு பாருங்க.''

விவேக் பத்திரிகையைப் புரட்டிப் பார்த்தான். பத்திரிகையின் நான்காவது பக்கம், எட்டாவது பத்தியின் கோடியில், அட்ரஸ் பொடி எழுத்துக்களில் தெரிந்தது.

விவேக் வாய்விட்டுப் படித்தான். ''பதிப்பாளர்: கே. எஸ். சஹாடே. நெம்பர் எய்ட் பி., வீர் சாவர்கார் மார்க் — பிரபாதேவி— பாம்பே ட்வெண்டி எய்ட்...''

''இந்த அட்ரஸை உரசிப் பார்த்துடலாமா ஸார்?''

''டூ இட்... மிஸ்டர் விவேக்.''

**பி**ரபாதேவி, வீர் சாவர்கார் மார்க்கில் — 'தண்டர்' பத்திரிகை ஆபீஸ், மூத்திர நாற்றம் அடிக்கும் ஒரு சுல்லியின் கோடியில், சிதிலமான ஐந்தாவது மாடியின் மூன்றாவது தளத்தில் இருந்தது. விவேக் பைக்கை நிறுத்தி விட்டு, அரையிருட்டான மாடிப்படிகளில் ஏறினான். மாடிச் சுவர்களில் தாம்பூலக் கறைகள். குடித்தனம் இருக்கும் சீழ்ப் போர்ஷனிலிருந்து கடுகெண்ணெய் வாசம் காற்றைக் கெடுத்தது.

மூன்றாவது தளத்தின் முதல் அறையின் கதவில் 'தண்டர்' பத்திரிகையின் போர்டு இந்தியிலும், இங்கிலீஷிலும் சிக்கனமாய்த் தெரிந்தது.

சாத்தியிருந்த கதவை மெல்லத் தட்டினான் விவேக்.

''டொக்... டொக்...''

''கோன்...?''

கேட்டபடியே கதவைத் திறந்தவருக்கு ஐம்பது வயதிருக்கலாம். பளீரென்ற வெள்ளைக் குர்தா அணிந்து, முன் மண்டையில் வழுக்கையையும் வயிற்றில் தொப்பையையும் காட்டினார்.

''கோன்?'' மறுபடியும் கேட்டார்.

''போலீஸ்'' விவேக்சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்து தன் உத்யோக அட்டையை அவர் முகத்துக்கு நேரே பிடித்தான்.

அவர் எச்சில் விழுங்கினார்.

''க்யா... சாஹியே....?''

''ஏக்.. என்கொய்ரி...''

''பைட்டியே...'' அவர் நாற்காலியைக் காட்டினார். விவேக் உட்கார்ந்து கொண்டே இந்தியில் சம்பாஷித்தான்.

''உங்க பேர்...?''

''சஹாடே...''

''கே. எஸ். சஹாடே...?''

''எஸ்.''

''தண்டர் பத்திரிகையை எத்தனை வருஷமா நடத்தறீங்க?''

''கடந்த ஒரு வருஷ காலமா.''

''பத்திரிகை மார்க்கெட்ல கிடைக்குமா?''

''கிடைக்காது. இது சந்தாதாரர்களுக்கு மட்டும்..''

''உங்க பத்திரிகைக்கு மொத்தம் எத்தனை சந்தாதாரர்கள் இருக்காங்கன்னு சொல்ல முடியுமா...?''

''ஆயிரத்து நானூற்று அறுபத்தி நாலு பேர் ஸார்.''

''அந்த லிஸ்ட்டைக் கொடுக்க முடியுமா..?''

விவேக் கேட்டுக் கொண்டிருந்த அதே விநாடி —

அறைக் கதவை யாரோ தட்டினார்கள்.

''டொக்.. டொக்..''

(தொடரும்)

# இராஜிநாமா

## கிருஷ்ணா



பரபரவென்று இராஜிநாமாக் கடிதம் எழுதினேன்.

மனத்திலுள்ள கோபம் புரிந்தோ, என்னவோ, என் 'பார்க்கர்' பேனா, வெள்ளைத் தாளில் வார்த்தைகளைத் துப்பியது.

'ப்ச், இந்த மானேஜர் என்ன வார்த்தை சொல்லிவிட்டார்...!'

நடந்தது இதுதான்:

நான் தனியார் தொழிற்சாலை ஒன்றில் ஷாப் இன்ஜினீயராக உள்ளேன். எனக்கு மேல் ஒரு மானேஜர். நாங்கள் இருவரும் தான் அந்தச் சிறு தொழிற்சாலையின் உற்பத்திக்குப் பொறுப்பானவர்கள்.

இப்போது ஷாப்பில் தொழிலாளர் மத்தியில் ஒரு சிறு பிரச்னை.

கொஞ்சம் அவர்களை விட்டுப் பிடிக்கலாம் என்பது மானேஜரின் கருத்து.

பிரச்னையை வளர விடாமல், உடனேயே எங்கள் 'பவரை' உபயோகப்படுத்தி இரண்டில் ஒன்று பார்த்தாக வேண்டும் என்பது என் யோசனை.

எங்களுக்குள்ளிருந்த இந்தக் கருத்து வேறுபாடு இன்று காலை சூடான விவாதமாகியது. முடிவில் —

''நான் உங்கள் மானேஜர். நான் சொல்றபடி செய்யுங்க,'' என்று அவர் சொல்ல,

''நீங்க சொல்றபடி கேட்டு நடக்கிறதுக்கு என்னைப் போல இவ்வளவு படித்த இன்ஜினீயர் தேவையேயில்லையே? சாதாரண எஸ். எஸ். எல். ஸி. படிச்ச தொழிலாளியே போதுமே!'' என்று நான் சூடாகப் பதிலடி கொடுத்துவிட்டு என் இடத்திற்குத் திரும்பினேன்.

'ஈகோ' பாதிக்கப்பட்ட கொதிப்பில் இதோ தயாராகிவிட்டது என் இராஜிநாமாக் கடிதம்.

கடிதத்தை நிதானமாகப் படித்தார் மானேஜர்.

ஐம்பது வயதுக்கேற்ற முன்புற வழுக்கை. கண்ணாடி வழியாய் அலையும் பார்வை. தக்காளி போன்ற சிவந்த, உருண்டை முகம். சற்றுப் பூசிய உடல். படித்து முடித்த பிறகு என்னைத் தீர்க்கமாய் அவர் பார்க்கவும் சற்றுச் சங்கடத்துடன் மேஜையிலிருந்த பேப்பர் வெயிட்டை வலது கையால் சுற்றிய வாறே மௌனமாக இருந்தேன்.

''வெல் சதீஷ்! இந்தக் கடிதாசைத் திடீர்னு நீங்க கொடுக்கிறதுக்குக் காரணத்தைத் தெரிஞ்சுக்கலாமா?''

புரிந்து கொண்டே கேட்ட அவர் கேள்வியினால் ஏற்பட்ட எரிச்சலில் வார்த்தைகளைக் கொட்டினேன்.

''சார், ஷாப் பிரச்னைகள்ல உங்க பார்வையும், என் பார்வையும், இதுவரை ஒத்தே வந்ததில்லை. நமக்குள்ளே ஏற்படுகிற இந்தக் கருத்து மோதல் விசுவரூபம் எடுத்து, தனிப்பட்ட முறையிலே நம்மைப் பாதிக்கிறதுக்குள்ளே நானே விலகிக்கலாம்னு முடிவு செஞ்சிட்டேன்,'' என்று அழுத்தமாகச் சொல்லி முடித்தேன்.

என்னைப் பார்த்துப் புன்னகை செய்தபடியே தம் இருக்கையிலிருந்து எழுந்து மேஜையைச் சுற்றி வந்து என் அருகே நின்றார் மானேஜர்.

''சதீஷ், நீங்க இளைஞர். உங்க துடிப்பை என்னாலே புரிஞ்சுக்க முடியுது. ஒரு பிரச்னை ஏற்பட்டால் அதோட பல கோணங்களை ஆராய்ந்து பார்க்கத்தான் நம் இரண்டு பேருக்கும் இங்கே நிர்வாகத்திலே பொறுப்பு கொடுத்திருக்காங்க. நம்ம ரெண்டு பேரோட கருத்தும் ஒத்துப் போயிட்டா அப்புறம் எதுக்கு இங்கே இரண்டு பேர் வேணும்? நீங்க என்னோட விவாதம் பண்ற போது நிஜமாகவே நான் சந்தோஷப்படறேன். ஏன் தெரியுமா? அதன் மூலமாப் பிரச்னையை அணுகறதுக்குப் புதுசா பல பாதைகள் தெரியுது. உங்க கருத்தைக் கேட்டு அதோட என் அனுபவத்தையும் கலந்துதான் எந்த முடிவையுமே நான் எடுக்கிறேன். அதனாலே உங்க விவாதம் நிச்சயமா நம்ம உறவுல பிரதிபலிக்காது. பி ஸ்போர்ட்டிவ்!'' என்று சொல்லியபடியே என் இராஜிநாமாக் கடிதத்தைக் கிழித்து எறிந்துவிட்டு என் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

தெளிந்த மனத்துடனும், புதிய உற்சாகத்துடனும் என் வேலையைத் தொடர்வதற்காக அங்கிருந்து கிளம்பினேன்.

காதலி: நாம தினசரி அந்தப் படகு மறைவில் சந்திக்கிறது எங்கப்பாவுக்குத் தெரிஞ்சு போச்சு...!"

காதலன்: ஐயய்யோ... அப்புறம்...!"

காதலி: அந்த இடம் இராசியில்லாததாம். இடத்தை மாற்றச் சொன்னார்..."

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.





அவர்: ஏண்டா டி.வி.ஸ்டேஷன்லவேலை கிடைச்சும் வேண்டாம்னு விட்டுட்டே?

இவர்: நாலு பேர்கிட்ட திட்டு வாங்கற மாதிரி வேலைக்கெல்லாம் போனாலும் பரவாயில்லை; லட்சம் பேரோட சாபம் வாங்கற வேலை வேணாம்'னு சொல்லிட்டாங்க, எங்க அம்மா!

— ஆர். உமாபதி.

ஒருவர்: சார்! ஒரு சின்ன உதவி செய்யணும்...

பயில்வான்: என்ன; ஆட்டோகிராப் வேணுமா?

ஒருவர்: இல்லை. மாதக் கடைசி... ஹி... ஹி... அதனாலே இந்த 'டூத் பேஸ்ட்' டியூபைக் கொஞ்சம் நல்லா அமுக்கிக் கொடுத்தால் நல்லாயிருக்கும்...

— ரகோத்தமன்.





"இதுவரைக்கும், இருபது சிறுகதைகள் எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பினேன். எல்லாமே திரும்பி வந்துடுச்சு...!"

"பேசாம, "திரும்பி வந்த கதைகள்"னு தலைப்பு வச்சு, தொகுப்பா வெளியிடு...!"

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

"நம்ப ஆபீஸில் ஃபெஸ்டிவல் அட்வான்ஸ் கொடுக்கறதுண்டுங்கறது உண்மைதான். ஆனால் அதை ஃபிலிம் ஃபெஸ்டிவலுக்காகவெல்லாம் கொடுக்க முடியாதுய்யா!"

— ரா. ரகோத்தமன்.



# தாய்நாடு



தமிழுக்கு வார்ப்படம் — ஐ மீன், யுத்தப் படம் — புதுசுதான். கொஞ்சம் அவுட்டேட்டட். பரவாயில்லை.

சகாக்கள் இருவர் சேர்ந்து செய்த சதியால் பொறுப்புள்ள ஒரு ராணுவ அதிகாரி செத்தது மட்டுமல்ல; அதன் பிறகு தேசத் துரோகி என்ற அவப்பெயருக்கும் ஆளாகிறார். வெளியுலகுக்குத் தெரியாமல் அவருடன் புதைக்கப்பட்ட உண்மையைத் தந்தையின் உண்மை ஊழியர்கள் மூலம் அறிந்து, அவர்களையும் அநியாயமாய்க் காவு கொடுத்து, ஊருக்கு உபகாரிகளாய் வெளிச்சம் போடும் சதிகாரர்களை உலகத்துக்கு இனம் காட்டி, பெற்றவரைப் பற்றியிருந்த துரோகக் கறையைப் பிள்ளை வழித்துப் போட்டுத் தியாகியாக்கிக் காட்டுவதுதான் கதை. இடைவெளி: ஒரு தலைமுறை.

அந்த நாள் மிலிட்டரி ஆபீசர் சத்யராஜின் மிடுக்கும் கம்பீரமும் அடுத்து வரும் பிள்ளை சத்யராஜிடம் அம்பேல். பின்னவர் நாதியில்லாமல் சேரிப்புறச் சூழலில் வாழ்ந்த ரௌடி ஜாதி. அடிதடியும் குடியும்; அதற்கு நடுவிலே கொஞ்சம் காதல், கொஞ்சம் மனிதாபிமானம், நிறைய வஞ்சம் தீர்க்கும் வெறி.

பெரும்பாலும் வாயைக் காட்டிலும் அவருடைய கை, கால்தான் பேசிக் கொண்டிருக்கின்றன. ஆரம்பத்தில் தன்னை ஆத்மார்த்தமாய்க் காதலித்த ராதிகா, திடுதிப்பென்று விலகும் போது தன்னிலை விளக்கம் சொல்லத் தடுமாறும் திணறலும், தன்னைப் பெற்றவளையும் உடன்பிறப்பையும் நம்பியார் அடையாளம் காட்டும் போது கனிந்துருகும் நெகிழ்ச்சியும் கோடையிலே வீசும் குளுந்தென்றல்.

பாவம் ராதிகா — புலிக்குப் பூனை வேஷம் போட்ட மாதிரி! வில்லன் நிழல் வியாபாரத்துக்குப் பேரம் பேசும் ஸ்தலத்துக்குள் சத்தியராஜையும் அவர் தங்கை, தங்கை கணவனையும் வரவழைக்க ஏற்பாடு செய்கிறாரே அந்தச் சில நிமிடங்களில் மட்டும், தான் இருப்பதைக் காட்டியிருக்கிறார். சத்யராஜிடம் அவசர முடிவெடுத்து, 'நான் உங்களைத் தப்பாத்தாங்க புரிஞ்சுக் கிட்டேன்...' என்று அடுக்கும் மேடை நாடக வசனப் பாணியில் பேச்சு சுத்தம்தான். ஆனால் அத்தனை தீவிரமாய்க் காதலித்தவர் என்ன ஏது என்று விசாரியாமல் முறித்துப் போடுவது அபத்தமில்லையோ?

சலீம் பாய் நம்பியார் ஊரோடு ஒட்டாமல் காட்டிலே ஒதுங்கி வாழ்வதன் மர்மம் என்ன? சிறையிலிருந்து வெளிவந்த பிருத்விராஜ் (கிட்டி) சத்யராஜைத் தேடி அலைவானேன், அவரைத் தீர்த்துக்கட்ட வில்லன்கள் சதி செய்வானேன்? இந்த மர்மங்களில் ஆவலைக் கிளறி, பொருத்தமான விதத்தில் மர்மத்தை உடைத்திருக்கும் விதத்தில் டைரக்ஷன் தெரிகிறது. பாராட்டுக்கள்.

கேப்டன் ராஜின் அசாத்தியமான கம்பீரத்துக்கு முன்னால் நாசர் என்னதான் நெஞ்சைத் தூக்கிக் கையைப் பின்னால் கட்டிக் கொண்டு இப்படியும் அப்படியும் உலாத்திக் காட்டினாலும் எடுபடவில்லை.

சவப்பெட்டி சாமுவேல் — ஜனகராஜ் சரியான ஹெல்ப்பர். சிரிப்பு கம்மிதான். சத்யராஜுக்குக் கேடயமாய் இருந்து அவரைத் தப்புவிப்பதற்காக அலி வேஷம் போட்டு அழகு காட்டும் கட்டத்தில் ஒரு சூபீர் கலகல.

வெள்ளைப் புடைவை ஸ்ரீவித்யா ஒரே சோக முகத்தில் தெரிந்தாலும் பிரிந்து விட்ட தன் பெண்ணும் பிள்ளையும் திரும்பக் கிடைத்து விட்ட நிம்மதியில்; 'சலீம் பாய்' என்று தன் உண்மை ஊழியர் நம்பியாரை அடையாளம் கண்டு கொண்ட சந்தோஷத்தில் மட்டுமல்ல — அடுத்து அவர்களைப் பறிகொடுத்த துக்கத்தைக் கொட்டும் போதும் பட்டென்று மனசைச் சுண்டுகிறார். மிலிட்டரி ஆபீசர் மனைவியாய் சத்யராஜிடம் அவர் காட்டும் சரஸம், பிணக்கு — முழுப் படத்திலும் மனசுக்கு உற்சாகம். கிளுகிளுப்பு அங்கேதான். புதுசுகள் கற்றுக் கொள்ளணும்.

அகலத் திரையில் துப்பாக்கி முனைச் சண்டைக் காட்சிகளை ஏதோ மேனாட்டு நகலென்று தோன்றும் அளவுக்கு மெனக்கெட்டுப் படம் பண்ணியிருக்கிறார்கள்.

பாடல்களில் பெரும் புரட்சி. டி.எம்.எஸ். ஐந்து பாடல்களை வெளுத்து வாங்கியிருக்கிறார். அவர் குரலுக்கு வாகான தாளம் போட வைக்கும் ட்யூன்கள்.

யுத்தம் சம்பந்தமான டெக்னிகல் சமாசாரங்கள், அதி சாமர்த்தியமான சதி நுணுக்கங்கள், சும்மா தொட்டுக் காட்டினால் போதும் என்று விட்டிருக்கும் காட்சிகள் — ஒன்றிப்போக முடியவில்லை.

— பி. எஸ். எஸ்.

# எரிதழல்

எஸ். முரளிகிருஷ்ணன்

அம்மா தணலைப் பொறுக்கி எடுக்கும் அழகே அலாதி. கனன்று சிவந்திருக்கும் தணல் கட்டியை அனாயாசமாகப் பொறுக்கி எடுத்துக் கும்மட்டியில் போட்டாள். விசிறியால் வேகு வேகு என்று விசிற, 'படபடவென்று சப்தத்துடன் புதிய கரிகள் தீப் பிடித்துக் கொண்டன. கும்மட்டி நடுவில் நெருப்பு ஜொலித்தது. விசிறிய வேகத்தில் ஒரு தணல் கட்டி மறுபடி வெளியே விழ, அம்மா அதைக் கண்ணிமைக்கும் நேரத்தில் எடுத்து அடுப்பில் போட்டு விட்டாள்.

"அம்மா, அம்மா, பார்த்து எடு, கை சுட்டுடப் போறது!'' என்று கத்தினேன்.

"அதுக்கு ஏண்டா இப்படி அலர்றே? கையாள்ற படி கையாண்டால் நெருப்பு நம்மை ஒண்ணும் பண்ணாது'' என்று சொன்னபடியே அம்மா கும்மட்டியை விசிறிக் கொண்டிருந்தாள். நன்றாக நெருப்புப் பிடித்துக் கொண்டவுடன் ஒரு சிறிய வெண்கல உருளியை அதன் மேல் வைத்தாள்.

முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்த படியே அம்மாவின் சமையல் லா க வ த் தை



வேடிக்கை பார்த்தேன். வெள்ளிக்கிழமை இரவு சாம்பிராணி போடும் போதும் இப்படித்தான். சாம்பிராணிக் கரண்டியிலிருந்து விழும் தணல் கட்டியைக் கையால் எடுத்து மீண்டும் கரண்டியில் போட்டு விடுவாள். அம்மாவை நெருப்பு ஒன்றும் பண்ண முடியாதோ?

காலம் முழுதும் கஷ்டப்பட்ட அம்மா... இனிமேலாவது அம்மாவை நல்லபடியாகப் பராமரிக்க வேண்டும்; வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன். ஆனால் அறுநூறு ரூபாய்ச் சம்பளத்தில் என்ன வசதி செய்து கொடுப்பது? எஸ்.எஸ்.எல்.சி. படிப்புக்கு இந்தச் சம்பளம் அதிகம் என்கிறான் ஆபீஸில். இவ்வளவு தூரம் படித்ததே அம்மாவின் ஓடாய்த் தேய்ந்த உழைப்பும் அவள் தயாரித்த அப்பளமும் ஊறுகாயும் தந்ததுதான். வக்கீல் குமாஸ்தாவாய் இருந்த அப்பா, கைக் குழந்தையைக் கொடுத்துக் கண்ணை மூடினதுமே அம்மாவின் இருண்ட கண்டம் ஆரம்பமாகி விட்டது. என்னை வளர்த்த இந்த இருபத்தைந்து வருஷங்களில் அம்மா அத்தனை அவமானங்களையும் பெற்று விட்டாள்.

என்னையறியாமல் கண்களில் கண்ணீர் வெளிப்பட்டது. யதார்த்தமாகத் திரும்பின அம்மா கவனித்து விட்டாள். ''அசடு, அழுறியா என்ன?''

புறங்கையால் கண்களைத் துடைத்துக் கொண்டேன். ''இல்லேம்மா. உனக்கு ஒரு, காஸ் அடுப்பு கூட வாங்கித் தர முடியாம— வக்கில்லாம இருக்கேனே. இவ்வளவு வருஷம்தான் கஷ்டப்பட்டே, தலையெழுத்து! இன்னும் கூட இப்படியே இருக்கணுமா?''

''சீச்சீ என்ன பேசறே? என்ன கஷ்டம் எனக்கு? ராஜா மாதிரி நீ இருக்கே; நல்லபடியா உத்தியோகத்தில இருக்கே. மாசம் பொறந்தா களையா சம்பளம் வருது. சௌக்கியமா இருக்கேன் நான்'' என்றாள்.

''இல்லம்மா, ஆயிரம்தான் நீ சொன்னாலும் என் மனசு கேக்கல்லே. உனக்கு ஒரு வசதி பண்ணிக் கொடுக்கத் துப்பில்லாம இருக்கேன் பாரு'' என்றேன். முழங்காலைக் கட்டியபடியே தலையை உயர்த்திப் பார்த்தேன். அடுப்புக்குப் பக்கத்தில் சற்று மேலாக, கைக்கெட்டும் உயரத்தில் பொருத்தப்பட்டிருந்த பலகை, கரி படிந்து, கறுப்பாகப் போய் இருந்தது. பாத்திரங்களும் தட்டுக்களும் பளபளவென்று தேய்த்துக் கவிழ்க்கப்பட்டிருந்தன. பெரும்பாலும் அலுமினியம்தான். சில பாத்திரங்கள் பித்தளை, எவர்சில்வர்.

எதிர்ப் பக்கத்துச் சுவரில் ஐந்தாறு சுவாமிப் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. எல்லாப் படங்களும் துடைத்து, சந்தனமிடப்பட்டிருந்தன. சமையல் மற்றும் சாப்பிடும் அறை பத்துக்குப் பத்தடி இடம்தான். படுப்பதற்கும் படிப்பதற்கும் இன்னொரு அறை உண்டு. நூறு ரூபாய் வாடகையில் இதுவே அதிகம். ரொம்ப காலமாக நாங்கள் இருந்து வருவதால் இச்சலுகை.

அம்மா அடுப்பிலிருந்து உருளியை இறக்கி விட்டு, வேறு ஒரு பாத்திரத்தை வைத்தாள். ''எனக்கு இப்போதைய கஷ்டமெல்லாம் ஒரு மாட்டுப் பொண் இல்லையேங்கறதுதான். அந்தக் குறை தீந்துதுன்னா நான் நிம்மதியாய்ப் போய்ச் சேருவேன்'' என்று சொன்னபடியே அம்மியில் தேங்காய், மற்ற சாமான்களை அரைத்துக் கொண்டிருந்தாள்.

கல்யாணத்தைப் பற்றி அதிகம் நான் யோசிக்கவில்லை. எனக்குக் கல்யாணம் வேறு ஒரு கேடா?

''நேத்திக்கு முதல் நாள் கூட கணேசன் வந்து விட்டுப் போனார். அவர் பொண்ணு சந்திராவை உனக்குக் கொடுக்கணும்னு ரொம்ப ஆசை. ஒரே பொண்ணு ஏதோ ஸ்கூல்ல மச்சரா வேலை பாக்கிறாளாம். நானூறு ரூபாய் சம்பளமாம். முன்னமேயே ரெண்டு தரம் என்கிட்ட சொல்லிண்டிருந்தார். முந்தா நேத்திக்கு உன் ஜாதகத்தைக் கொடுத்தேன்'' என்றாள் அம்மா.

''என்கிட்டச் சொல்லாம ஏம்மா ஜாதகத்தைக் கொடுத்தே? கொஞ்ச நாள் போகட்டுமே. இப்ப என்ன அவசரம் கல்யாணத்துக்கு?'' என்றேன். என் போலிக் கோபம் எனக்கே கூச்சத்தைக் கொடுத்தது.

''உனக்கு அவசரமில்லேன்னாலும் எனக்கு உடனே ஒரு மாட்டுப் பொண் வேணுமே. எனக்குத் தள்ளலை. அந்தப் பொண்ணையும் நான் பார்த்திருக்கேன். நல்ல பொண்ணு.''

எனக்குள் லேசாக ஆவலும் எழுந்தது. நல்ல பெண்ணாக இருந்து, வேலையும் பார்த்தால் நல்லதாகப் போயிற்றே.

''உன் இஷ்டம் போல் பண்ணும்மா'' என்று சொல்லும்போதே என் முகம் சிவந்தது.

எழுந்து குளிக்கப் போனேன். இன்று ஞாயிற்றுக் கிழமை. நிதானமாகச் சாப்பிட்டு, பகல் தூக்கம் போட்டு, உழைப்பை மூட்டைக் கட்டி வைக்க வேண்டிய நாள். இன்றைய விசேஷச் சேர்க்கை, கனவு. 'சந்திரா எப்படி இருப்பாள்?' எனக்கும் கூடக் கனவு வருமென்பது நம்ப முடியாமல் இருந்தது.

சமையலறையில் அம்மா உற்சாகமாக இருந்தாள். அதனால் எனக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. ''அம்மாவுக்கு இந்த வகையிலாவது சந்தோஷம் கிடைத்தால் சரிதான்.''

கணேசன் பூ, பழங்களுடன் வரும் போதே தெரிந்து விட்டது. ஜாதகம் நன்றாகப் பொருந்துகிறதாம்; எப்பொழுது பெண் பார்க்க வரச் சௌகரியப்படும் என்று கேட்டார். எனக்குப் போதையாக இருந்தது.

அடுத்த வாரமே போய்ப் பெண்ணைப் பார்த்தோம். பிரமாதமான அழகு இல்லை யென்றாலும் கனவு காண வைக்கிற அளவுக்கு இருந்தாள். கணேசன் 'சீர் எல்லாம் சுமாராகத்தான் செய்வேன், அவ்வளவு தான் வசதி!' யென்றார். அம்மா மறுப் பேதும் சொல்லவில்லை.

கணேசன் முகத்தில் மகிழ்ச்சி பொங்கப் பஞ்சாங்கத்தைப் பார்த்தார். அடுத்த மாதத்திலேயே ஒரு தேதி குறித்தார்.

இரு பக்கத்திலும் ஏற்பாடுகள் மளமள வென்று நடந்தன. முப்பது நாட்கள் நகர்ந்ததே தெரியவில்லை. எளிமையான திருமணம். நெருங்கிய நண்பர்களும் அதை விடக் குறைவான உறவினர்களும் வந்திருந்தனர். பரவசத்தில் உடம்பெல்லாம் புல்லரிக்க, அக்கினி முன் சந்திராவைக் கைப் பிடித்தேன்.

மறுநாள் வலது காலை எடுத்து வைத்து, என் வீட்டுக்கு வந்தாள். எனக்குத் தெரிந்தவரையில் வீட்டைச் செலவில்லாமல், அழகுபடுத்தியிருந்தேன். எவ்வளவு தான் செய்தாலும் ஒட்டு வீடு உத்திரங்களுடன் பல்லை இளித்தது. சந்திரா ஒவ்வொன்றையும் அக்கறையுடன் கவனித்தாள்.

அக்கம் பக்கத்துக் குடித்தனங்கள், தெரிந்தவர்கள் கல்யாணம் விசாரிக்க வந்தார்கள். அம்மாவுக்குப் பெருமையாக இருந்தது. அம்மாவின் திருப்தி எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. சந்திராவைச் சமையலறைப் பக்கமே நெருங்க விடவில்லை அம்மா. ''இதெல்லாம் நான் பார்த்துக்கறேன். நீ போய் உன் ஆம்படையானோடு பேசிண்டிரு'' என்று அனுப்பி விட்டாள்.

மெருகு குலையாத இளமை, புது வாசனை எல்லாம் என்னைப் பரவசப் படுத்தின. ஆனாலும் சந்திராவுடன் பேசுவதற்கு வெட்கமாக இருந்தது. போதாததற்குச் சுற்றிலும் உறவினர்கள் வேறு. கல்யாணத்துக்கு வந்திருந்த உறவினர்கள் ஒவ்வொருவராக விடைபெறுவதற்கு ஒரு வாரம் ஆயிற்று. இப்போது வீட்டில் நான், சந்திரா, அம்மா. எனக்கு லீவு முடிந்து விட்டது. சந்திராவுக்கும் ஆபீஸ் போவதை நினைக்கும் போதே வேண்டா வெறுப்பாக இருந்தது.

காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கும் போது மணி ஏழாகி விட்டது. பதறி விட்டேன். ஒன்பது மணி ஆபீஸுக்கு ஏழரை மணிக்கு வீட்டை விட்டுப் புறப் பட்டால்தான் சரியாயிருக்கும். ஆறு மணிக்கு எழுந்திருந்தால்தான் என்னால் ஏழரை மணிக்குப் புறப்பட முடியும். அதுவும் இன்றைக்கு லீவு முடிந்து சேரப் போகிற நாள் வேறு; கடவுளே! பக்கத்தில் சந்திரா இன்னும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

சந்திராவுக்கு எட்டரை மணிக்குப் புறப்பட்டால் போதும். ஆனாலும் அதற்காக இப்படியா ஏழு மணி வரை தூங்குவது? உள்ளே பாத்திரங்களின் சத்தம் கேட்டது. சாம்பார் வாசனை தவழ ஆரம்பித்தது. அம்மா சமையல் செய்து கொண்டிருக்கிறாள். பாவம் அம்மா! அவளுக்குக் காலை நாலு மணிக்கப்புறம் தூக்கம் வராது. ஒண்டியாகவே வாசல் பெருக்கி, கோலம் போட்டு, தண்ணீர் பிடித்து, பால் வாங்கி வந்து.... அம்மா ஓர் இயந்திரம்!

சந்திராவை எழுப்பினேன். பலனில்லாமல் உலுக்கினேன். மெதுவாக அசைந்து கொடுத்தாள். ''ஏய் இன்னும் தூங்கறியே மணி ஏழாயிடுத்து!'' என்றேன். சந்திரா பதறவேயில்லை. ''அதனால் என்ன?'' என்று முனகியபடியே புரண்டு படுத்தாள்.

''அதனால் என்னவா? அம்மா பாரு ஒண்டியா கஷ்டப்படுறா. எனக்கு இன்னிக்கு ஆபீஸ் ஜாயின் பண்ணணும், நீயும் ஸ்கூலுக்குப் போகணும்... எழுந்திரு'' என்று சொல்லிக் கொண்டு மீண்டும் உலுக்கினேன். நழுவியிருந்த புடைவையைச் சரி செய்தேன். போர்வையை எடுத்து மடித்து வைத்தேன். சந்திரா சலனப்படவேயில்லை. ''ப்ளீஸ், என்னை டிஸ்டர்ப் பண்ணாதீங்க'' என்று கண்ணைக் கூடத் திறந்து பார்க்காமலே சொன்னாள்.

''இப்ப எழுந்திருக்கப் போறியா இல்லையா? மணி ஏழரையாகுது. என்ன தூக்கம்?'' என்று சொல்லிக் கொண்டே அவள் கைகளைப் பிடித்து மேலே தூக்கினேன். ''அம்மா பாரு, காலைல நாலு மணிக்கே எழுந்து எல்லா வேலைகளும் செய்யறா.''

''அதுக்கு என்னை என்ன செய்யச் சொல்றீங்க? எனக்கு எட்டு மணிக்கு எழுந்து தான் பழக்கம்.'' மீண்டும் நன்றாக ஒருக்களித்துப் படுத்துக் கொண்டு தூக்கத்தில் ஆழ முயற்சி செய்தாள்.

எனக்கு எரிச்சல் ஏற்பட்டது. கட்டுப் படுத்திக் கொண்டேன். இவளை எழுப்ப முடியாதென்று தோன்றியது. அவசரமாகக் குளித்து விட்டு வந்தேன்.

மணி ஏழரையாகி இருந்தது இன்னும். படுக்கையிலிருந்து எழுந்திருக்கவில்லை. அம்மா அதெல்லாம் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. இயந்திரமாக எனக்கு டிபன் பாக்ஸ் எடுத்து வைத்து, தட்டில் சாதம் போட்டிருந்தாள். வேகவேகமாகச் சாப்பிட்டேன். என் மனைவி கையசைத்து விடை கொடுக்காமலே ஆபீஸ் போனேன்.

பதினைந்து இருபது நாளாகியும் சந்திரா புதுப் பெண்ணாகவே இருந்தாள்.

ஒரு நாள் காலையிலும் சீக்கிரம் எழுந்திருக்கவில்லை. அம்மாவுக்குக் கூடமாட உதவவில்லை. மாலையில் அவள் பள்ளிக் கூடத்தில் இருந்து வந்ததும் ஏதேனும் கதைப் புத்தகத்தை வைத்துக் கொண்டு படிக்க உட்கார்ந்து விடுகிறாள். உபசாரத்துக்காக வேனும் சமையல் உள்ளில் நுழைவதில்லை.

அம்மா சிரத்தையாகவே காப்பி போட்டுக் கொண்டிருந்தாள். நான் குத்திட்டு உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். ஞாயிற்றுக் கிழமை விடுமுறையானதால் சோம்பலாகக் கொட்டாவி விட்டேன். சந்திரா ஏதோ பரீட்சையென்று ஸ்கூலுக்குச் சென்றிருந்தாள். அம்மா மணக்க மணக்கக் காப்பி நீட்டினாள் என்னிடம்.

''அம்மா!'' என்றேன்.

திரும்பினாள். மனசுக்கு ரொம்ப துக்கமாக இருந்தது. இவள் இவ்வளவு வருஷம் உழைத்தது போதும் என்று ஓய்வு கொடுக்கலாமென்று நினைத்தது நடக்காமல் போய் விட்டது சோகமாக இருந்தது. இவள் வேலைகள் இப்போது இரட்டித்து விட்டன. எனக்கு உழைத்துக் கொண்டிருந்தவள் இப்போது என் பெண்டாட்டிக்கும் சேர்த்து உழைக்கிறாள். அம்மாவைப் பார்க்கும் போது என்னவோ செய்தது.

''என்னப்பா. கூப்பிட்டு அப்படியே பாத்திண்டிருக்கே என்ன விஷயம்?'' என்றாள்.

''மாட்டுப் பெண் விஷயத்திலே தப்புப் பண்ணிட்டியோன்னு தோணறதும்மா.''

''எதுக்காக அப்படிச் சொல்றே?''

''நீ முன்னக்கி இப்போ இளைச்சுப் போயிருக்கேம்மா. மாட்டுப் பெண் உனக்கு சிசுருஷை பண்ண வேண்டியதிருக்க, நீ அவளுக்கு எல்லாம் பண்ணிண்டிருக்கே. ஒரு மாட்டுப் பெண் வந்து கூட நீ கொஞ்ச நேரம் உக்காந்துக்க முடியலே பாரு.'' சொல்லும் போது துக்கம் தொண்டையை அடைக்கக் கண்களில் நீர் கோத்துக் கொண்டது எனக்கு.

''அழுகுதான் போ! என்னடாதுன்னு பார்த்தேன்... இதுக்கா இப்படி மாஞ்சு போறே? பாவம் சின்னஞ் சிறிசு அப்படித்தான் இருக்கும்; நாமதான் மெதுவா வழிக்குக் கொண்டு வரணும். நீ வேணும்னா பாரேன். இன்னும் கொஞ்ச நாள்ளே உன் பெண்டாட்டியை எப்படி மாத்தறேன்னு?''

அம்மா பரபரவென்று சமையல் காரியங்களைக் கவனித்தவாறு பேசிக் கொண்டிருந்தாள். சந்தேகமேயில்லை. அம்மா கண்டிப்பாக மாற்றி விடுவாள் சந்திராவை. தணலையே லாகவமாகக் கையாளும் அம்மாவுக்கு இதெல்லாம் ஒரு பொருட்டே இல்லை.

---

**டி**.வி. நிகழ்ச்சி அல்லது டி.வி. தொடர் ஒன்றின் விமர்சனம்;
டி.வி. வாங்கும்போது, நிறுவும்போது, பார்க்கும்போது அல்லது பழுது பார்க்கும் போது ஏற்பட்ட அனுபவம்;
டி.வி. விளம்பரங்கள் தொடர்பான நிகழ்ச்சி அல்லது உரையாடல்;
வீடியோ அனுபவம் அல்லது வீடியோ கேம் அனுபவம் —
என்று டி.வி. – வீடியோ தொடர்புடைய எந்த அம்சத்தை வேணுமானாலும் நீங்கள் ஆகஸ்டு இறுதிவரை தொடர்ந்து எழுதி வரலாம்.



பிரசுரமானால் பரிசு ரூ. 25. தவிர பிரசுரமாகும் ஒவ்வொரு துணுக்கு அல்லது விமர்சனத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு ஆறு மாதங்களுக்குப் பின் குலுக்கல் முறையில் ஓர் எண் தேர்ந்தெடுக்கப்படும். அவருக்குக் கலர் டி.வி. பரிசு!

**உங்கள் வீட்டில் டி.வி. இல்லையா? அக்கம் பக்கத்தில் நடந்தவற்றை, நண்பர் வீட்டில் டி.வி. பார்த்த அனுபவத்தை எழுதலாமே? டி.வி. பரிசு பெறலாமே!**

**உங்கள் வீட்டில் டி.வி. இருக்கிறதா, புதிய கலர் டி.வி. பரிசு பெற்றுப் பழைய டி.வி.யை விற்றுக் காசாக்கலாமே!**

முக்கிய நிபந்தனைகள் :

* நீங்கள் எழுதுவது அடக்க முடியாமல் சிரிப்பை வரவழைக்க வேண்டும்!
* விமர்சனம் எனில் கல்கியில் அரைப் பக்கத்துக்குள்ளும் துணுக்கு எனில் பத்துப் பதினைந்து வரிகளுக்குள்ளும் அடங்க வேண்டும்!
* எந்தத் தேதியில் எழுதுகிறீர்களோ அதற்கு மிகவும் சமீபத்திய கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் உள்ள தேதிப் பகுதியை மட்டும் — மூன்று வரிகள் — நீங்கள் எழுதும் தாளின் மேல் புறம் பார்வையாக ஒட்டி அனுப்ப வேண்டும்.
* உறை மீது ''டி.வி. – வீடியோ பக்கங்கள்'' என்று குறிப்பிடவும்.
* பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது.

**பரிசு: கலர் டீ.வி!**

# 'ஜால்ரா போடாததற்கு மகிழ்கிறேன்!'

வட்டமேஜை

* கலையான கேள்விகளுக்குச் சூடாக மிகத் தெளிவாகப் பதிலளித்த கே. ஏ. கே.யின் கருத்துகள் யாவும் ஆணித்தரமானவையாக இருந்தன. திராவிட இயக்கங்கள் திறமை வாய்ந்த தலைமையின் கீழ் ஒன்று சேர வேண்டும் என்று அவர் கூறியிருப்பது, பெரியார் — அண்ணா கொள்கையில் அவருக்கிருக்கும் அளவு கடந்த ஈடுபாட்டினையே உணர்த்துகின்றது.

வேதாரண்யம். செல்வி வடுகன்.

* கே.ஏ.கே. தமது பேட்டியில், ஜெயலலிதா வெற்றி பற்றிய கேள்விக்கு, 'நானும் இன்னும் பத்து லட்சம் அதிகம் செலவு செய்திருந்தால், வெற்றி பெற்றிருப்பேன்' எனக் கூறுவதை எங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. அதன்படி வெற்றி பெறுவது என்றால் இன்று தமிழ் நாட்டில் காங்கிரஸல்லவா வெற்றி பெற்றிருக்கணும்?

இடைய காட்டை. சாகுல் அமீது ஆசாத்.

* வையவன் எழுதிய 'நான் போகும் பாதை' அருமை! "...போய்ப் பார்ப்போம். ஸ்டேஷன்ல மட்டும் மனுஷன் இல்லையா? அவங்களுக்கு மனச்சாட்சி இல்லியா...? அதையும் பார்ப்போம்! இது என் பாதை. விட முடியாது!" எனப் புறப்பட்ட வள்ளி துணிச்சலானவள்தான். அவளைப் படைத்த ஆசிரியருக்கு என் பாராட்டுக்கள்.

மதுரை. எஸ். சங்கரநாராயணன்.

* 'கிராமக் கலைகளைப் போற்றும் ஒரு கல்லூரி' என்ற கட்டுரையைப் படித்தேன். படிக்கப் படிக்க வியப்பாகவும் விறுவிறுப்பாகவும் இருந்தது. 'பழையன கழிதலும், புதியன புகுதலும்' என்பதை 'பழையன கொள்ளுதலும் புதியன ஏற்றலும்' எனத் திருத்தி மதுரை அமெரிக்கன் கல்லூரி மாணவர்கள் கிராமிய நடனக் கலைகளைப் பயில்வதைப் பார்க்கும் பொழுது மகிழ்ச்சியாக உள்ளது.

சிதம்பரம். தங்க. குஞ்சிதபாதம்.

* 'ஒரு கிராமமே முன்னேறிய கதை' கட்டுரை, புகைப்படங்கள் பிரமாதம். முழு பக்கப் படத்தை வெகுவாக ரசித்தேன். அந்த கிராமியப் பின்னணிக் காட்சியில் என் மனம் லயித்து விட்டது.

கிருஷ்ணகிரி. அன்பழகன்.

* 'கருணாநிதி எழுத வேண்டிய புதிய அத்தியாயம்' தலையங்கம் படித்தேன். கருணாநிதி முதலமைச்சர் ஆன பின் அவருக்கு ஜால்ரா போடாமல் ஒரு நல்ல நண்பரைப் போல, மதி அமைச்சரைப் போல நல்ல ஆலோசனை கூறுவது மிக்க மகிழ்ச்சியாயிருக்கிறது.

நீடூர். அ. அஹம்மது நிஜாமுத்தீன்.

* தலையங்கத்தில் 'கல்கி'யின் அன்பு கலந்த ஆதங்கம் தெரிகிறதே தவிர யதார்த்தம் தெரியவில்லை. தமிழ் நாட்டினுடைய எந்த அரசின் அல்லது தலைவரின் ஆதரவையும் நம்பி விடுதலைப் புலிகள் போராட்டம் தொடங்கவில்லை; தொடரவில்லை. தமிழீழம் என்பது அவர்களது கனவன்று; தாகம்! எந்த நிர்ப்பந்தமும் அவர்களைப் போராட்டத்தைக் கைவிடச் செய்யவோ, 'சுயாட்சி தரும் தமிழ் மாநிலம்' என்பதோடு திருப்தியடையச் செய்யவோ முடியாது. எனவே, கலைஞர் எழுத வேண்டிய புதிய அத்தியாயம் — 'தமிழீழத் தாயகம்'தானே தவிர அதற்குக் குறைந்து வேறொன்றுமில்லை!

மதுரை — 6. ஆழ்வாரப்பன்.

* கல்கி 12.2.89 இதழில் கன்பூஷியஸ் பற்றிய எனது கருத்துக்கள் தவறானவை என்று செல்வராமன் வாதிடுகிறார். சீனத்து யிங்—யாங் தத்துவமும், சிவ—சக்தி தத்துவமும் ஒன்றுடன் ஒன்று எந்த வகையிலும் ஒப்பிட முடியாதவை. "பெண்கள் மானுட இனத்தினரே. ஆனால் ஆண்களை விடக் கீழானவர்களே; ஒருநாளும் ஆணுக்குச் சமமான அந்தஸ்தை அவர்கள் அடைவதென்பது முடியாது" என்று மிகத் தெளிவாகவே கன்பூஷியஸ் சொல்லியிருக்கிறார். ஜே. பெல்டன் என்பவரது 'சீனா உலகை உலுக்குகிறது' என்ற நூலின் 316—17 பக்கங்களில் இக்குறிப்பைக் காணலாம். சீனப் பெண்கள் காலங்காலமாகப் பட்ட துயர் நினைப்பவர் நெஞ்சை உருக்கும் தகையது. சீன வரலாறு தெரியாதவர்கள் கூட பர்ல். எஸ். பக் எழுதிய 'நல்ல நிலம்' நூலைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். அவ்வளவுக்கும் ஆணிவேராய் இருந்தது கன்பூஷியஸின் தத்துவங்களே என்று உறுதியாகச் சொல்லலாம். எனது கருத்துக்கள் சரியானவையே.

சென்னை. திலகவதி.

* வெந்த புண்ணில் வேல். 12.2.89, 'கல்கி' இதழில் வெளியாகி இருக்கும் 'கார்ட்டூன்' — ம. பொ. சி. பற்றியது. தி.மு.க. அரசு பதவி ஏற்ற உடனேயே தமிழ் வளர்ச்சி உயர் மட்டக்குழு தலைமைப் பதவியை ரத்து செய்தது சித்திரிக்கப்பட்டுள்ளது. இந்தச் சித்திரம் கொடூரம் நிறைந்த கேலியாகும். ம.பொ.சி. தமிழக அரசியலுக்கோ அல்லது 'கல்கி'க்கோ புதியவரல்ல. நம்மில் பெரும்பாலோரது தலைவிதி அவர்களுக்கு ஏற்படும் ஆபத்தெல்லாம் மிக நெருங்கியவர்களிடமிருந்து என்பதுதான். குதிரை கீழே தள்ளட்டும், பரவாயில்லை; குழியையுமா பறிக்க வேண்டும்!

சென்னை — 88. சினி. மகாலிங்கன்.

(ம.பொ.சி.யிடம் நமக்குள்ள மதிப்பும் மரியாதையும் சினி மகாலிங்கன் கொண்டிருப்பதை விட அதிகமே தவிர குறைவல்ல. அதனாலேயேதான் சிற்சில சமயங்களில் நாம் ம.பொ.சி.யிடம் கருத்து மாறுபாடு கொள்ளவும் நேர்கிறது. — ஆர்.)

* 'குதிரைப் பந்தயத்தில் கோல்மால்' (கல்கி, 12.2.89) என்ற கட்டுரை தொடர்பாக:

ஒவ்வொரு குதிரையைப் பற்றியும் நன்கு ஆராய்ந்து பார்க்க வேண்டும். கடைசியாகச் சென்னையில் ஓடியதையும் அதற்கு முன் எந்தெந்த ஊர்களில் ஓடியது என்றும், ஓடியதில் 1—வது, 2—வது, 3—வது, 4—வது முறையே வந்துள்ளதா என்றும் அப்போதைய கொடுக்கப்பட்ட எடையும் இப்போது கொடுக்கப்பட்டுள்ள எடை, தூரம் (ஹேண்டிகாப்) போன்ற பல விஷயங்களையும் வைத்து நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்தால் ஒவ்வொரு பந்தயத்திலும் எந்த குதிரை ஜெயிக்க வாய்ப்பு உள்ளது என முடிவு செய்யலாம். இவை அனைத்தும் நன்றாகத் தெரிந்து அனுபவமுள்ளவர்கள் ரேஸில் முறைகேடு நடக்கிறது என்று சொல்ல மாட்டார்கள். இதை விட்டு, டிப்ஸ், லக்கி நம்பர், இவற்றைக் கையாண்டால் தோல்வி அடைவர். இத்தோல்வியால் எரிச்சல் வரும். அவதூறு செய்ய ஆவேசம் வரும்.

நான் 24 வருடங்களாக ரேஸுக்கு வந்து கொண்டு இருக்கிறேன். என்னுடைய அனுபவத்தில் கண்டவரை குதிரைப் பந்தயம் நல்ல முறையில் நடக்கிறது என்றும் முறைகேடு ஏதுமில்லை எனவும் தைரியமாகவும், உறுதியாகவும் கூறுகிறேன்.

பொன்னேரி. எஸ். ராமலிங்கம்.

# கம்ப்யூட்டர்





கவலை என்ன
இனி?
கம்ப்யூட்டர் வந்துவிட்டது!

நமக்கென
உழைக்கும் சம்பாதிக்கும்
வரவு செலவுக் கணக்கு வைக்கும்.

ரோபோவை இயக்கி
வாகனங்களைச் செலுத்தும்
விண்ணில், நீரில்
மண்ணில்.

விபத்துகளின் விவரம்
உடனுக்குடன் கொடுக்கும்.





தூக்கத்திலிருந்து
கனவுகளைப்
பிரித்தெடுத்து அதனிடம் தருவோம்.

ஒவ்வொரு
கனவின் நிறத்தையும்
கண்டுபிடித்துக் காரணம் சொல்லும்.

விஞ்ஞானக் கூடத்தில்
நம்
தூக்கங்களை வேதித்துப் பார்த்து
யாருக்கு
எந்தத் தூக்கம்
பொருந்தும் என்று திருத்தம்
செய்யும்.





கண்ணீர்விட,
புன்னகை செய்யக்
கம்ப்யூட்டருக்குத் தெரியாது.

எனவே
இலாப நட்டங்களை
ஒப்படைப்போம் அதன்வசம்.

வாருங்கள்
வாசலிலே நமக்காகக்
காத்திருந்து
மூத்துவிட்ட
வாழ்க்கையிடம் கொஞ்சம்
பேசுவோம்
மனம்விட்டு!

அடடே! என்னது?
வாழ்க்கையையும் கம்ப்யூட்டரே
எடுத்துக் கொண்டதா?

தமிழன்பன்





# "உங்கள் மனைவியைப் பற்றிச் சில உண்மைகள்..."

"நீங்கள்தானே சங்கர்?"

"ஆமாம்... வாருங்கள்..." என வரவேற்ற சங்கர் அருகிலிருந்த நாற்காலியைக் காட்டினான்.

வந்தவனுக்கு முப்பது வயதிருக்கும். பைஜாமாவும் ஜிப்பாவும் அணிந்திருந்தான். தோள் பட்டையிலிருந்து நீண்ட ஜோல்னாப் பை தொங்கியது. நாற்காலியில் உட்காராமல் தயங்கியபடி நின்றான்.

"பரவாயில்லை... உட்காருங்கள்!" என மீண்டும் சங்கர் உபசரித்து உட்காரச் செய்தான்.

"எனக்குச் சொந்த ஊர் லால்குடி. அதாவது உங்கள் மாமனார் ஊர்..."

சங்கரின் முகத்தில் வியப்பு தெரிந்தது. "என் மாமனார் ஊரா?" எனக் கேட்டான்.

"ஆமாம்..."

சங்கர் உள்ளே திரும்பிப் பார்த்தான்.

"யாரையும் கூப்பிட வேண்டாம்... முக்கியமாக உங்கள் மனைவியைக் கூப்பிடாதீர்கள். நான் வந்ததே உங்கள் மனைவியைப்பற்



# ஜனனி

றிச் சில உண்மைகளைச் சொல்லிப் போகத் தான்...''

''என் மனைவியைப் பற்றியா! மிஸ்டர்...'' — சங்கரின் குரல் உயர்ந்தது.

''பதற்றப்படாமல் கேளுங்கள். இன்று உங்கள் மனைவி பவானி. மூன்று மாதங்கள் முன்பு திருச்சிக் கல்யாண மண்டபத்தில் நீங்கள் தொட்டுத் தாலி கட்டியவள். அவளும் நானும் உயிருக்கு உயிராகக் காதலித்தோம்... இதோ இருக்கின்றன அவள் எனக்கு எழுதிய காதல் கடிதங்கள்...''

தன் பையில் கையை விட்டுத் துழாவி 'ரப்பர் பாண்ட்' போடப்பட்டிருந்த ஒரு கட்டுக் காகிதங்களை எடுத்து நீட்டினான்.

சங்கர் அவற்றை மேலோட்டமாகப் படித்தபின் முகத்தைச் சுளித்துக் கொண்டான். நாவல்களும் சினிமாக்களும் இரு இளைஞர்களின் மனநிலை எப்படியெல்லாம் பாதித்திருந்தன என்பதற்கு அந்தக் கடிதங்கள் எடுத்துக்காட்டு. நாகரிகத்தின் எல்லையை மீறிவிட்ட சில சொற்றொடர்கள் அருவருப்பைத் தந்தன.

''இவ்வளவுதானா? இன்னும் இருக்கிறதா?'' எனக் கேட்டான் சங்கர்.

''இவ்வளவுதான்... எப்படியெல்லாம் எழுதியிருக்கிறாள். படித்தீர்களா...? என் மேல் அத்தனை பாசம் உள்ளவள் போல் நடித்தவள் இப்போது உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள என்ன காரணம்? உங்கள் பதவி, பணம், சொத்து... நாளைக்கே இன்னொரு பணக்காரன் கிடைத்தால்...''

''ஸ்டாப் இட்!'' என எரிந்து விழுந்தான் சங்கர்.

''உங்கள் மனநிலை எனக்குப் புரிகிறது. ஸார்... நான்கு நாட்கள் முன்னால் அவளைக் கோவிலில் பார்த்தேன். முன்பு பழகிய உரிமையில் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு விட்டேன்... திரும்பியவள் என்னைப் பார்த்து, 'நீ யார்?' எனக் கேட்டு விட்டாள்... என்ன சாகசம் பார்த்தீர்களா?''

''அப்படியா?''

''ஆமாம் ஸார்... எனக்கு அவள் வாழ்க்கையைக் கெடுக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. இந்தக் கடிதங்களை நான் எப்பொழுதோ அழித்திருப்பேன்... நாங்கள் பழகிய அந்த இனிய நாட்களின் நினைவாக வைத்திருந்தேன்... பாவி... பசப்புக்காரி... என்னைத் தெரியாதது போல் நடித்து என்னை வெறியனாக்கி விட்டாள்... என் நிலை உங்களுக்கும் வரக் கூடாது அல்லவா...? எச்சரிக்கத்தான் வந்தேன்.''

''சரி... உங்களுக்கு எவ்வளவு வேண்டும்?'' எனக் கேட்டான் சங்கர்.

''என்ன கேட்கிறீர்கள்?''

''இந்தக் கடிதங்களுக்கு என்ன விலை என்றுதான் கேட்கிறேன்.''

''ஸார்! 'பிளாக்மெயில்' செய்வது என்



''வாடகைக்கு வரப்போறவர் சொல்றதைப் பார்த்தால், அவரைச் சரியாக விசாரிக்காமல் நாம அவசரப்பட்டு வீட்டை வாடகைக்கு விட்டுட்டோமேன்னு கவலையாயிருக்கு.

''அப்படி என்ன சொன்னார்?''

''நல்ல நாள் பார்த்து சாராயம் காய்ச்சிக் குடிக்க வர்றேன்னு சொல்லிட்டுப் போறாரு!''

— ரகோத்தமன்.



ஒருத்தி: ஏண்டி, உன் வீட்டுக்காரர் தமிழ் நாட்டுல எத்தனை கட்சியிருக்கு அவற்றின் கொள்கைகள் என்னன்னு ஆராய்ச்சி செய்துக்கிட்டு இருந்தாரே. முடிச்சிட்டாரா?

தோழி: இல்லை. பாதி ஆராய்ச்சியிலேயே அவரை பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே சேர்க்கிறபடி ஆயிடுச்சி!

— சியாமளா.

''என் பையனுக்குக் கூச்ச சுபாவம்!''

''அதுக்காக அவன் டி. வி. யில் செய்தி வாசிக்கிற பெண் முன்னாடி தலை குனிஞ்சு நின்னு வெட்கப்படுறது நல்லா யில்லே!''

— போடி. ப்ரியபாரதி.





"இதோ பாருப்பா... சர்வர்... ஒரு படி மாவு அரைக்கிற அளவுக்கு டிபன் கொடு... போதும்...!"

— ஏ. ஆர். வீரராகவன்.

நோக்கம் இல்லை. அந்த எண்ணம் இருந்தால் அவளைத்தானே தேடியிருப்பேன். என்னைப் புறக்கணித்ததற்காக அவள் வேதனைப்பட வேண்டும்."

"உம்... அணு அணுவாச் சாக வேண்டும்... மனம் புழுங்கி வெம்ப வேண்டும்."

"ஆமாம் ஸார்... 'கரெக்டாக'ச் சொல்லி விட்டீர்கள்..." என்றான் வந்தவன் உற்சாகமாக.

சங்கர் நிதானமாக மேஜை டிராயரைத் திறந்தான். 'சிகரெட் லைட்டரை' எடுத்துக் கடிதக் கற்றையைப் பற்ற வைத்தான்.

"ஸார்... ஸார்!" என வந்தவன் திகைத்துப் போய்ப் பதறினான்.

"அப்படியே உட்கார்!" என அதட்டினான் சங்கர்..." அவள் உன்னைக் காதலித்து ஏமாற்றினாள்... ஒப்புக் கொள்கிறேன்... ஆனால் நீ அவளை உண்மையாகக் காதலித்திருந்தால் — உன் அன்பு தூய்மையாக இருந்திருந்தால் — எப்படிப்பட்ட நிலையிலும் அவள் வாழ வேண்டும் எனத்தான் நினைப்பாய். ஆனால் நீ ஒரு சுயநலக்காரன்! ஒரு குடும்பத்தின் நிம்மதியைக் குலைக்க வந்த நச்சுப் பாம்பு. நான் கழுத்தைப் பிடித்துத் தள்ளுவதற்குள் நீயே ஓடிவிடு..."

வந்தவன் மிரண்டு போய் ஓடிப் போனான்.

கீழே கிடந்த கருகிய காகிதத் துண்டுகளைப் பொறுமையாகப் பொறுக்கிக் குப்பைக் கூடையில் போட்டான் — சங்கர்.

திருமணத்திற்கு முன் பவானி எப்படி இருந்திருந்தால் என்ன? இப்போது அவளும் அவள் அண்ணன் சங்கரநாராயணனும் அந்நியோன்னியமாக ஒத்துப் போய் இருக்கிறார்கள்.

அவள் அண்ணனைப் பற்றி அவனுக்குத் தெரியும்... அவன் கைகளில் இந்தக் கடிதங்கள் கிடைத்திருந்தால் தன்னையும் வருத்திக் கொண்டு பவானியின் வாழ்க்கையையும் அவலமாக்கியிருப்பான்.

பெருகி வந்த வெள்ளத்தைத் தடுத்த அணையாக — கருகிப் போன காகிதமாக அவர்கள் தாம்பத்தியம் வீணாகாமல் — தன்னால் காக்க முடிந்ததே. இருவரையுமே அலுவலக நண்பர்கள் சங்கர் என்று அழைத்தது இந்த விஷயத்துக்கு எவ்வளவு உதவிகரமாய் இருந்திருக்கிறது!

ஆண்டவனுக்கு நன்றி சொன்னான் — சங்கர் என்ற கௌரிசங்கர்.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI

ராஜ்மோகன் காந்தி

8

சுதந்திரக் கட்சி பற்றி ஜவாஹர்லால் அடிக்கடி பேசினார். ஸி.ஆர். தமது பேச்சிலும் எழுத்திலும் இறைவன் அருளை வேண்டுவது சகஜம். இதையொட்டி, "புதிய கட்சியின் மூத்த பாகஸ்தர் கடவுள்தான் போலும்!" என்று கிண்டல் செய்தார் நேரு. திரும்பத் திரும்ப, "சுதந்திரக் கட்சி பணக்



ஸி. ஆர். — ராமராவ்: இரு உடல்களிலும் ஒரு ஆன்மா!

# வாழ்நாளெல்லாம் நீடித்த வாலிப நட்பு

காரர்களின் கட்சி" என்று நேரு வர்ணித்த போது, அதை விடப் பல மடங்கு அதிகமாகக் காங்கிரஸ், செல்வந்தர்களிடம் பண உதவி பெற்று வந்தது என்பதை மறந்து விட்டவராகக் காணப்பட்டார். நேருவால் பூசப்பட்ட இந்தக் கரியை ஸி.ஆரும் அவரது சகாக்களும் துடைத்தெறியக் கணக்கற்ற தடவைகளில் முயன்றனர். ஆனால் நேரு தொடக்கத்திலேயே இவ்வாறு கரி பூசி விட்டதால் அது நன்றாக ஒட்டிக் கொண்டதுடன், மிகுந்த பாதகமாகவும் விளங்கியது.

"இவர்களுடைய நிலை என்ன; எதற்காகப் போராடுகிறார்கள் என்பதே புரியவில்லை" என்று நேரு ஒருமுறை கூற, "எங்களது இருபத்தொரு அம்சத் திட்டத்தைப் படித்துப் பாருங்கள்" என்று பதிலளித்தார் ஸி.ஆர்.

ஆக, வாதப் பிரதிவாதங்கள் வளர்ந்தன. சில சமயம் சூடு பிடித்தன; சில சமயம் அர்த்தமுள்ள வாதங்களாக விளங்கின; வேறு சில தருணங்களில் அநியாயமான வாதங்களாக இருந்தன. ஆயினும் இருவருக்குமிடையே இருந்த சகோதர பாசம் மாறவே இல்லை. சுதந்திரக் கட்சி உருவான பிறகு, ராஜாஜி முதன் முறையாக டில்லிக்கு விஜயம் செய்த போது, எழுபது வயதான இளைஞர் நேரு, இரண்டு மாடிகளைக் கிடுகிடுவென்று ஏறிக் கடந்து, எண்பத்தோரு வயதான ஸி.ஆர். தங்கியிருந்த இல்லத்துக்குள், "ராஜாஜி! நீங்கள் எவ்வளவு வாலிபத்துடன் விளங்குகிறீர்கள் என்பதைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று கூறியபடியே நுழைந்தார்.

நேரு — ராஜாஜி மோதல் என்பது வருந்தத்தக்க விஷயம்தான். ஆனால் அது தவிர்க்க முடியாத ஒன்று. இருவருக்கும் இடையே லட்சியங்களும் அவற்றை அடைவதற்கான மார்க்கங்களும் நீண்ட காலமாகவே மாறுபட்டிருந்தன. ஆனால் சுதந்திரப் போராட்டம் என்ற பொது நோக்குக் காரணமாக அந்த மாறுபாடுகள் அடக்கி வைக்கப்பட்டிருந்தன. நாடு விடுதலை பெற்ற பிறகும், உடனடிக் கவலைகள், பிரிவினை, அது தொடர்பான பிரச்னைகள் போன்றவை கவனத்தை முழுவதுமாகக் கவர்ந்து லட்சிய மாறுபாடுகளைத் தலையெடுக்க விடாமல் செய்தன. ஆனால் நாளாவட்டத்தில், ஆழ வேரூன்றி இருந்த இடது சாரி — வலது சாரி எண்ணங்கள் பிளவை ஏற்படுத்தி, ஸி. ஆரையும் நேருவையும் ஒருவரை ஒருவர் எதிர்க்கும் நிலைக்குத் தள்ளியதில் வியப்பில்லை.

இந்த லட்சிய ரீதியான பிளவின் இயல்பையும் சரித்திரத்தையும் சுதந்திரக் கட்சி ஆரம்பித்து இரு ஆண்டுகளுக்குப் பிறகு ராஜாஜி விளக்கினார்:

"கேம்பிரிட்ஜில் படித்து விட்டுத் திரும்பி வந்த நேரு, சோஷலிஸ சிந்தனை உடையவராக விளங்கினார். எல்லாவற்றிலும் தலையிட்டு, எல்லாவற்றையும் கட்டுப்படுத்துகிற அரசாங்கமானது, மக்கள் மீது சந்தோஷத்தையும் வசதியான வாழ்க்கையையும் திணித்து விட முடியும் என்று அவர் நம்பினார். அவரது இந்த சோஷலிஸ சித்தாந்தத்தைக் காந்திய காங்கிரஸ் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று தொடர்ந்து வற்புறுத்தியும் வந்தார். ஆனால் இதில் அவரால் வெற்றி பெற முடியவில்லை. பல காலம் சென்று, சுதந்திரம் வாங்கித் தந்தவர் என்ற கௌரவத்தை உடைய ஒரே மனிதராக அதிகார பீடத்தில் அமர்ந்திருக்கும் வாய்ப்பைப் பெற்ற தருணத்தில்தான், அவருடைய காலத்துக்கு ஒவ்வாத லட்சிய நோக்குக்கு அதிர்ஷ்டம் அடித்தது! அது காங்கிரஸ் கட்சியின் கொள்கையாயிற்று."

இதற்கு மறுபுறமாக, 'ஸி.ஆர். பாரம்பரிய அமைப்பே தொடர வேண்டும் என்று நினைக்கிறார்; தொழிலதிபர்கள் தங்கள் இஷ்டப்படி நடந்து கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும் என்கிறார்' என்றெல்லாம்









நேரு தமது நோக்கில் ஸி.ஆரைக் குறை கூறி விமர்சித்து வந்தார்.

**ந**ண்பர் ராமராவின் உடல் நிலை மோசமாகி வந்தது. 1960 நவம்பர் இரண்டாம் வாரத்தில் ஸி. ஆர். அவரைக் காணச் சென்ற போது வந்திருப்பவர் இன்னார் என்று அடையாளம் புரிந்து கொண்டு ராமராவ் புன்னகை புரிந்த போதிலும் அவர் பேச்சு தொடர்பற்றதாக இருந்தது; சிந்தனை தெளிவற்றதாக இருந்தது. ஸி. ஆரின் மனம் உடைந்து போயிற்று. ராமராவின் மருமகளைப் புரந்தரதாசர் பாடல் ஒன்றைப் பாடுமாறு கூறினார். அதைக் கேட்டுத் தமது நண்பரின் கண்கள் ஒளி சிந்துவதைக் கண்டார். பேசுவதை நிறுத்தி, கைகளைக் கூப்ப முயன்றார் ராமராவ். ஸி.ஆர். அதற்கு உதவ, ராமராவின் முகத்தில் அமைதி படர்ந்தது.

நண்பரின் மரணத் தருவாயில் அவர் அருகிலேயே ஸி.ஆர். இருக்க விரும்பிய போதிலும் கடமை அழைத்தது. தட்ட முடியவில்லை. சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை மக்களிடையே விளக்கிக் கூற, மேற்குக் கடற்கரையோர ஊர்களில் பல கூட்டங்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. நவம்பர் 28—ம் நாள் ஸி.ஆர். பெல்காமிலிருந்த போது, 'எல்லாம் முடிந்து விட்டது' என்ற செய்தி கிடைத்தது. காரில் இரவெல்லாம் பயணப்பட்டு ஸி. ஆர். அதிகாலையில் பெங்களூரை அடைந்தார். ஆனால் அதற்குள் ராமராவின் தகனம் நடந்து முடிந்து போயிற்று. நெருப்பு இன்னும் கனன்று கொண்டிருந்த சிதையை மூன்று முறை வலம் வந்தார் ஸி.ஆர். தகன பூமியை விட்டு வெளியே வந்த போது, அவர் வாய் ஒரு சமஸ்கிருத சுலோகத்தைக் கூறிக் கொண்டிருந்தது: ''நெருப்பே! உனக்கு எல்லா பாதைகளும் தெரியும். எங்களைச் சரியான மார்க்கத்தில் அழைத்துப் போ! எங்களைச் சுத்தப்படுத்து; பாபங்களிலிருந்து காப்பாற்று! உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறோம். திரும்பத் திரும்பக் கேட்டுக் கொள்கிறோம்!''

**ப**தினாறு வயது ராமராவின் நட்பைக் கோரி, ஸி.ஆர். தமது பதினாலாவது வயதில் ஒரு கடிதம் எழுதி அவர் அறையில் வைத்து விட்டு வந்தார். அப்போது ஆரம்பமான நட்பும் நெருக்கமும் அறுபத்தெட்டு ஆண்டுகளாக உடையாமல், சிதறாமல் நிலைத்து வந்தன. ராமராவின் மரணத்துக்குப் பிறகும் அந்த அன்பு தொடர்ந்தது. மூன்று மாதங்களுக்குப் பிறகு ஸி.ஆர்., தமது நண்பர் ராமராவ் பெயராலும் ஆசிரியர் டெய்ட் பெயராலும் பங்களூர், ஸெண்ட்ரல் கல்லூரியில் ஓர் அறக்கட்டளை நிறுவினார். அவ்விருவர் பெயராலும் ஆண்டுதோறும் ஒரு பரிசு, ஷேக்ஸ்பியர் நாடகங்களில் அசாதாரணத் தேர்ச்சி பெறும் ஒரு மாணவனுக்கு வழங்கப்பட வேண்டும் என்பது அறக்கட்டளையின் நோக்கம்.

தமக்கும் நவரத்ன ராமராவுக்கும் இருந்த நட்பின் தொடக்க கால நிகழ்ச்சிகளை ஸி.ஆர். சுயராஜ்யாவில் தாம் எழுதிய ஒரு கட்டுரையில் நினைவு கூர்ந்தார். ராமராவ் காலமாகிய கையோடு எழுதப்பட்ட அந்தக் கட்டுரையின் ஒரு பகுதி:

''நாங்கள் இருவரும் சேர்ந்து பல நூல்களைப் படித்தோம். சொல்லப் போனால் ராமராவ்தான் அதிகமாக எனக்குப் படித்துக் காண்பிப்பார். எங்கள் இருவரில் அவர்தான் தேர்ந்த ரசிகர். அவருடைய ருசிகள் உயர்தரமானவை. மந்திரத்தால் கட்டுண்டது போல அவர் காட்டிய வழியில் நான் சென்றேன். எங்களது நட்பு இதர கல்லூரி தோழர்களுக்கு அதிசயமாகவும் மர்மமாகவும் தோன்றியது. ஆனால் அதைக் கலைக்க முயலாமல் சகித்துக் கொண்டதுடன், வியந்து போற்றவும் செய்தார்கள்! நாங்கள் இருவருமே எங்கள் உள்ளத்துக்குள், 'வாழ்நாளெல்லாம் இந்த நட்பு நீடிக்கும்' என்று சத்தியம் செய்து கொண்டோம். அவ்வாறே கடைசி வரை நண்பர்களாக இருந்தோம். இரு உடல்களிலும் ஒரே ஆன்மா; ஒரே உடலில் இரு உயிர்கள் என வாழ்ந்தோம்.''

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

"மீனு... நிலவூறும் உனதழகுக்கு
உலகையே தருவேனே!"

# பிறந்த நாள் இன்று... அரும்பெரும் பரிசு ஒன்றை மீனுவுக்கு அளித்துவிட்டது ஃபேர் அண்ட் லவ்லி.

இந்த நாளுக்காகவே மீனா அரு முயற்சி எடுத்திருக்கிறாள். இரு மாத முன்னேற்பாடுகள்— அதில் முக்கியமானது ஃபேர் அண்ட் லவ்லி ஒத்துழைத்த மகிமை. அவள் மேனிமீது வெண்ணிலவைப் பொழிந்துள்ளது இதமாக, இயல்பாக. பரிசுப் பெட்டகத்தை அவளிடம் நீட்டும் ரவி, பால்நிலா முகத்தழகை பருகுகிறான் சக்கரவாகப் பறவை போல். அதை வாங்கும் மீனாவின் இதயம் பாடுகிறது நன்றிக் கீதம்— ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமுக்கு!

மீனாவைப் போலவே நீங்களும், கவனிக்கத் தக்க சிகப்பழகை அடைந்திட முடியும் ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா— இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல்



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்



கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது— வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.

மற்றொன்று: இதிலுள்ள இரட்டை சன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி— நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

**உபயோக முறை:**

கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

எளிதில் உள் உறிஞ்சப்படும் குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி. ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது.

உடலார உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள் இம் முகவரிக்கு:
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி ஆட்வைசர், பி.ஓ. பாக்ஸ் 756, பம்பாய்-400 021.

**ஃபேர் அண்ட் லவ்லி**
சிகப்பழகு க்ரீம்




## கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்